# கோம்பி விருத்தம்

## மூலமும் உரையும்

(இரண்டாம் பதிப்பு)

ஆசிரியர் :

ராவ் ஸாஹிப் V. P. சுப்பிரமணிய முதலியார் G.B.V.C.,

Retired Dy. Superintendent, C. V. D., Madras.

பதிப்பாசிரியர் :

T. K. சிதம்பரநாத முதலியார் B.A., B.L.,

Commissioner, H. R. E. Board, Madras.

 1931. [விலை அணா 8]

# பொருளடக்கம்

# பதிப்புரை

சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன் தமிழ் நூல் ஆராய்ச்சி ஒரு விதமாகத்தான் இருந்தது. ஒரு நூலைக் கையிலெடுத்த வுடன் 'இதற்கு முதல் நூல் எது? இதற்கு ஸம்ஸ்கிருதத்தில் ஏதேனும் ஆதாரமுண்டா?' என்றெல்லாம் விசாரிப்பார்கள். அத்தகைய முதல் நூலாவது ஆதாரமாவது இல்லாது போனல் கண்டனம் செய்வார்கள், அல்லது புறக்கணித்து விடுவார்கள். தமிழில் எழுதிய எந்தப் புராணமும் எந்தப் பிரபந்தமும் வட மொழி நிழற்கீழ் ஒதுங்கலாமே யன்றி மற்றப்படி தனித்து நிற்க முயன்ருல் ஆராய்ச்சியாளருடைய நெற்றிக் கண்ணல் வெந்து நீருய்ப் போவதைத் தவிர்த்து வேறு போக்கில்லை. ஆகவே தமிழ் நூல் எழுதப் புகுவோர் அநேகமாய்ச் சூத புராணி கர் கைத்தாங்கலின்றிக் காலெடுத்து வைக்கத் துணியமாட்டார் கள். கவிகளுக்குச் சூதமுனிவர் அருள் கிடைத்தவுடன் அவர் கள் ஒரே பறப்பாக ஆகாயத்தில் பறந்து விடுவதுதான். எவ் வளவாகத் தாழ்ந்து வந்த போதிலும் சந்திர மண்டலத்தைச் சுற்றி வட்ட மிடுவதே யொழியக் கீழே இறங்குவது கிடை யாது. அவர்களுடைய அற்புதக் கதிநயங்களெல்லாம் சாமான்ய மக்கள் கண்ணுக்கு எட்டாமலே போய்விட்டன.

அப்படிப்பட்ட காலத்தில் சாதாரணப் பொருளான பச் சோந்தியை விஷயமாகக் கொண்டு நகைச்சுவை தோன்ற எழு திய ஆங்கிலப் பாட்டொன்று மாணவர்க்கு ஏற்படுத்தியுள்ள பாடப் புஸ்தகங்களில் காணுவதா யிருந்தது. அதை ஆங்கிலம் பயின்ற மாணவரும் மற்றையோரும் ஒருவாறு அநுபவித்துப் பாராட்டி வந்தனர். அந்த ஆங்கிலக் கவியைத் தழுவி நூதன விஷயங்கள் பல சேர்த்துத் தமிழ் முறையில் நூலொன்று இயற்றினுல் அது தமிழர் பலர் அநுபவிக்க இடந்தரும் என்று எண்ணி இந்நூலாசிரியர் கோம்பி விருத்தத்தை இயற்றி ஞர்கள்.

நூல் வெளிவந்ததும், புலவர்களே யன்றித் தமிழ் வாசிக் கும் பழக்கமில்லாத மற்றையோரும்—என்போன்ற மாணவரும் கூட—வாசித்து அநுபவிக்கும்படியாக ஏற்பட்டது. தமிழ்ச்

செய்யுளில் நூல் அமைந்திருந்த போதிலும் அதையும் அநு பவிக்க இயலும் என்று சிலர் வார்த்தையாடத் தொடங்கினர். நூல் முழுவதையும் பாராதவருங்கூட, பாலைவனத்தின் வெப்ப மானது பற்பல இடங்களில் பிறந்த தீயெல்லாம் ஓரிடத்தில் ஒருங்கு சேர்ந்து இருந்ததை ஒத்தது என்று சொல்லும்,

பெரியவர் கோபத்திற் பிறந்த சாபத்தீ
அரிவையர் கற்புத்தீ அன்பர் துன்புறப்
புரிதரு பிரிவுத்தீ பொறுமைத் தீயிவை
ஒருவழித் தொக்கென உளதப் பாலையே.

என்ற பாடலையும் அது போன்ற வேறு சில பாடல்களையும் மனப்பாடம் செய்து கொண்டு நண்பர்கள் கூடிய இடங்களில் பாடிப் பலருக்கும் களிப்பூட்டலாயினர். முதற் பதிப்புப் பிரதி கள் அத்தனையும் செலவாகி விட்டபடியால், முன்பு வாசித்து அநுபவித்த உவகையை மறுபடியும் அநுபவிக்க வேண்டு மென்ற ஆசை தூண்டப் பல நண்பர்களும் நானும் கோம்பி விருத்தத்தை இரண்டாம் முறை பதிப்பிக்க வேண்டுமென்று ஆசிரியரைப் பல சந்தர்ப்பங்களில் கேட்டு வந்தோம். அவர் களும் இணங்கிச் சிற்சில இடங்களில் எளிதாக்கும் முறையில் மாறுதல்கள் செய்தும் நூதனமாகக் குறிப்புகள் சில சேர்த்தும் கொடுத்தார்கள். அவைகளைக் கொண்டு இந்த இரண்டாம் பதிப்பு வெளிவருகிறது.

தமிழில் ஏகதேசமான பயிற்சியுள்ளவர்களும் இந்நூலை வாசித்து அநுபவிக்கும்படியாகப் பொழிப்புரை குறிப்புகள் முதலியவை சேர்க்கப்பட்டிருக்கின்றன. இலகுவாக இயங்கக் கூடிய நான்கு சீர் கொண்ட விருத்தத்தில் அமைந்திருப்பதால் செய்யுளின் ஓசை யின்பத்தையும் உணர்ந்து கொள்ளலாம்.

மைலாப்பூர்,
14—4—1931. } T. K. சிதம்பரநாத முதலியார்.

# கோம்பி விருத்தம்

## முதற் பதிப்பு

---

## முகவுரை

முன் காலத்தில், சீவகசிந்தாமணி ஆசிரியர் நரியை விஷயமாகக்கொண்டு நரிவிருத்தமென்று ஒரு நூல் இயற்றியதாக அநேகர் கேட்டிருக்கலாம். அதுபோல, இது, கோம்பியைப்பற்றிக் கூறுவதனுல், கோம்பி விருத்தமென்று பெயரிடப் பெற்றது. கோம்பி யென்பது பச்சோந்தி.

இது, இங்கிலிஷில் உள்ள ஒருபாடலின்[1] கதா சாரத்தை மட்டும் கைக்கொண்டு அதனைப் பல வருணனைகள் உபகதைகள் முதலியவற்ருல் மிக விரிவாக்கி "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் - மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்ற கருத்துக்கு இடமாக இயற்றப்பட்டிருக்கின்றது.

கற்ருேரேயன்றி மற்ருேரும் இந்நூற்பொருளை எளிதாக அறிந்து கொள்ளும் பொருட்டு, இலகுவானதோர் உரை எழுதப்பட்டிருக்கின்றது. இந்த உரையில், பாட்டுக்களின் முக்கியமான கருத்து விளங்குதற்கு வேண்டியவை தவிர (அடைமொழி போன்ற) மற்றையவற்றின் பொருள்கள், சுருக்கத்தையும் தெளிவையும் உத்தேசித்து, சேர்க்கப்படவில்லை ; பொருள் நன்கு புலப்படுவதற்கு இன்றியமையாத இடைப்பிறவரல்கள் வேண்டுமிடத்து நிரப்பப்பட்டிருக்கின்றன. பாட்டுக்களின் முழுப்பொருளையும் தெரிந்துகொள்ள விரும்புவோர்க்கு உதவியாக அரும்பத விளக்கமும் எழுதப்பட்டுள்ளது.

---

1 'The Chameleon' by J. Merrick.

ஒருபாட்டுக்கும் அடுத்த பாட்டுக்கும் உள்ள பொருட் சம்பந்தத்தால் ஒன்றையொன்று இயல்பாகத் தொடருந் தொடர்ச்சி, (இந்நூலில் எடுத்தாளப்பட்டுள்ள) இங்கிலிஷ் கருத்துக்கள், கதைகள் ஆகிய இவைகள் முதலியவற்றைத் தெரிவிக்கும் விசேஷக் குறிப்பும் சேர்க்கப்பட்டிருக்கின்றது. இவ்விசேஷக் குறிப்பில் அடங்காதனவும் உள. அவை விரிவஞ்சி விடுக்கப்பட்டன.

பாட்டொருபக்கம் உரையொருபக்கமாக இருந்தால், இரண்டையும் ஒத்துப்பார்த்துப் பொருள் தெரிந்துகொள்ளல் சிறிது பிரயாசமாக விருக்குமென்று, அவ்வப் பாட்டின்கீழே அதனதன் உரையும் அரும்பதவிளக்கமும் விசேஷக்குறிப்பும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

வெ. ப. சு.

# கோம்பி விருத்தம்



க. மருதமா தியநிலம் வாழு மானிடர்
வெருவரும் குளிரினுன் மெய்ந் நடுக்குறீஇத்
தெருமரு பருவத்துஞ் சேர்ந்த மாந்தரைச்
சுரமென வெதுப்பிடுஞ் சுரமொன் றுண்டரோ.

(இதன் பொருள்.) குளிர்காலம் வந்தபோது, மருதம் குறிஞ்சி முல்லை நெய்தல் என்னும் நால்வகை நிலத்திலுள்ளோரும் குளிரினல் உடம்பு நடுங்கி வருந்துவது இயல்பு. அப்படிப்பட்ட காலத்திலும் தன்னை யடைந்தவர்களைச் சுரநோய்போல வெதுப்புகின்ற **பாலைநிலம்** ஒன்று உண்டு.

ஆதிய - முதலான ; வெருவரும் - அஞ்சும் ; மெய் நடுக்குஉறீஇத் தெருமரும் - உடம்பு நடுங்குதல் உற்று வருந்தும்; சுரம் - காய்ச்சல்.

உ. தண்மையே வெம்மையாத் தரங்கங் கானலா
ஒண்மணி பரல்களா வுற நெகிழ்ச்சியே
திண்மையா மீனினந் தீய மாக்களா
அண்மிய கடலென வகன்ற தச்சுரம்.

(இ - ள்.) (கடலின்) குளிர்ச்சியே வெப்பமாகவும், இரத்தினங்கள் பருக்கைக் கல்லுகளாகவும், அலைகள் கானலாகவும் நெகிழ்ச்சியான தன்மை (தரைபோல இறுகிக்) கடினமாகவும், மீன் கூட்டம் (செந்நாய் முதலிய மிருகங்களும் வழிப்பறி செய்

வோரும் ஆகிய) கொடிய மாக்களாகவும் மாறிய கடல்போல விசாலமாக, அந்தப் பாலைவனம் உள்ளது.

தண்மை - குளிர்ச்சி ; வெம்மை - வெப்பம் ; தரங்கம் - அலை ; ஒண்மணி - பிரகாசமுள்ள இரத்தினங்கள் ; பரல் - பருக்கைக் கல் ; திண்மை - இறுகியதன்மை ; மீன்இனம் - மீன்கூட்டம் ; மாக்கள், மனிதருக்கும் மிருகங்களுக்கும் பொதுப்பெயர் ; அண்மிய - அடுத்த.

[கடலும் பாலைநிலமும் மறுதலைப் பொருள்களாயினும் பரப்பாகிய பொதுத்தன்மைபற்றி ஒன்றோடொன்று உவமிக்கப்பட்டன. அவ்வுவமைக்கியையக் குளிர்ச்சி முதலியவை அவைகளுக்கு மறுதலையாகிய வெப்பம் முதலியவைகளாக மாறியது போலக் கூறியது காண்க.]

௩. சங்கரன் கண்ணெனச் சாற்றும் பானுவுந்
திங்களும் பார்த்துளேஞ் சிவந்த தீக்கணை
எங்கணுங் கண்டில மென் றியம்புவார்க்
கிங்குள ததுவென விறுத்த தச்சுரம்.

(இ - ள்.) சிவனுடைய கண்களென்று சொல்லப்பட்ட சூரிய சந்திரரைப் பார்த்திருக்கின்றோம், அச்சிவனுடைய சிவந்த அக்கினிக் கண்ணை மட்டும் எங்கும் பார்க்கவில்லை என்று சொல்லுவார்க்கு அந்தக் கண் இங்கே இருக்கிறதென்று சொல்லும்படி (அவ்வளவு வெப்பத்தோடு கூடியதாக) அந்தப் பாலை வனம் இராநின்றது.

சாற்றும் - சொல்லப்படுகின்ற ; பானு - சூரியன் ; திங்கள் - சந்திரன் ; தீக்கணை - அக்கினிக் கண்ணை ; எங்கணும் - எங்கும் ; கண்டிலம் - பார்க்கவில்லை ; உளது - உள்ளது ; இறுத்தது - தங்கியது.

[சிவந்த நிறத்தினாலும் வெப்பத்தினாலும் பாலைவனம், சிவனுடைய செந்தழற் கண்ணை ஒத்ததென்று கூறப்பட்டது. "செந்நெருப்பினைத் தகடு செய்துபார் செய்த தொக்கும் அச் செந்தரைப் பரப்பு..." என்று கலிங்கத்துப் பரணியில் வருவதைப் பார்க்க.]

௪. பெரியவர் கோபத்திற் பிறந்த சாபத்தி
யரிவையர் கற்புத்தீ யன்பர் துன்புறப்
புரிதரு பிரிவுத்தீ பொறாமைத் தீயிவை
ஒருவழித் தொக்கென வுளதப் பாலையே.

(இ - ள்.) பெரியோர்கள் கோபகாலத்தில் வெளிப்பட்ட சாபத்தீயும் மாதர்களுடைய கற்புத்தீயும் அன்பர்களாயினோர் துன்பம் அடையும்படி அவரைப் பிரிக்கின்ற பிரிவாகிய தீயும் பொறாமை என்ற தீயும் ஆகிய இவைகளெல்லாம் ஓர் இடத்திற் கூடித் திரண்டது போலவும் அந்தப் பாலைவனம் உள்ளது.

அரிவையர் - பெண்கள்; துன்பு உற - துன்பம் அடைய; புரிதரு - செய்கின்ற; ஒருவழித் தொக்கென - ஓர் இடத்திலே கூடினாற்போல.

ரு. நீர்நடு வடவையுண் டெனநிகழ்த்துவார்
ஆரது கண்டன ரதனைப் போலன்றிப்
பார்நடு நெருப்பெனப் பார்த்த பல்லவர்
சோர்விலா துரைப்பரச் சுடு சுரத்தையே.

(இ - ள்) சமுத்திரத்தின் மத்தியிலே வடவாமுகாக்கினி (நீர்நடுத்தீயாக) இருக்கின்றதென்று சொல்வது உண்டு; ஆனால் அந்த அக்கினியைப் பார்த்தவர்கள் இல்லை. அதுபோலல்லாமல், மேற்கூறிய பாலைவனத்தைக் கண்ணாலே கண்டோர் அநேகர் அதனை நிலநடுத்தீ யென்று சொல்லுவார்கள்.

நீர் நடு வடவை உண்டு - கடல் மத்தியிலே வடவாமுகாக்கினி உண்டு ; பார் - நிலம் ; பல்லவர் - பலர் ; சோர்விலாது - சொற்சோர்வு படாது ; உரைப்பர் - சொல்லுவார்.

௬. மேயவவ் வடவையே வேலை நீரெலாம்
மாய்வுற மடுக்குபு வளையு நீரின்றி
ஏயும்வெண் டேர்ப்புகை யிமையெஞ் செந்தரை
ஆயது கொல்லெனு மச்சு ரத்தினே.

(இ - ள்.) அன்றியும் அந்த வடவா முகாக்கினி தானே, தன்னைச் சூழ்ந்திருந்த கடல் முழுவதையும் உண்டு ஒழித்து விட்டு, அதனால், தன்னைச் சூழ நீரில்லாததாய், கானலாகிய புகையுடன் வெம்மையும் செந்நிறமும் உள்ள தரைப் பரப்பாக ஆகியதோ என்று சொல்லும்படியா யிருந்த அந்தப் பாலைவனத் திலே,

மேய - பொருந்திய ; வடவை - வடவாமுகாக்கினி ; வேலை - கடல் ; மடுக்குபு - உண்டு - குடித்து ; ஏயும் - பொருந்திய ; வெண்டேர் - கானலாகிய; புகை இமை - புகை பொருந்திய ; வெஞ்செந்தரை - வெப்பமும் சிவந்த நிறமும் உள்ள தரை ; ஆயது கொல் எனும் - ஆகியதோ என்று சொல்லப்படுகின்ற.

[பாலைவனம், தன்னிடத்திலுள்ள கானலானது புகையை ஒத்திருத்தலினாலும், தனக்கு இயல்பாகவுள்ள வெப்பம் செந்நிறம் இவைகளினாலும், தன்னைச் சூழ நீர் இல்லாததனாலும் கடலால் வளையப்படாத வடவாமுகாக்கினி போன்றது என்றபடி.]

எ. தீயதே நிலமுமாய்த் திரவ நீருமாய்
வாயுவு மாயதிவ் வைய கத்தென
ஏயுறு பொருளெலாம் வெம்மை யெய்திட
மேயபங் குனியினோர் வெய்ய நாளினே.

(இ - ள்.) இந்தப் பூமியிலே, தீயொன்றுதானே, கடினமான மண்ணும் ஆகி, நெகிழ்ச்சியான நீரும் ஆகி, ஆவித் தன்மையுள்ள வாயுவும் ஆகியதென்று சொல்லும்படி (கட்டிப் பொருள்கள் நெகிழ்ச்சிப் பொருள்கள் ஆவிப்பொருள்களான) எல்லாப் பொருள்களும் சூடு அடையும்படியாகப் பங்குனிமாதம் வர அந்த மாதத்திலும் மற்ற நாள்களைக் காட்டிலும் அதிக வெப்பமாக இருந்த ஒரு தினத்திலே,

திரவம் - நெகிழ்ச்சி ; ஆயது - ஆகியது ; வையகத்து - பூமியில் ; எயுறு பொருந்திய; எய்திட - பொருந்த ; மேய - மேவிய.

[பங்குனிமாதம் போலவே அதற்குப் பிந்திய சித்திரை, வைகாசி முதலிய சில மாதங்களும் வெப்பமானவைகள் என்றாலும், "சித்திரை பத்தில் (பத்தாந்தேதியில்) சிறந்த பெருங் காற்று, ஐப்பசி பத்தில் அறையில் அடைபடும்" என்ற பழமொழிப்படி அந்த வெப்பம் உள்ள மாதங்களில் வழங்கும் காற்றுப் பங்குனி மாதத்தில் இல்லாததனால், அந்த மாதங்களிலும் இந்த மாதம் அதிகப் புழுக்கம் உடையது. ஆனது பற்றியே, யாதாயினும் ஒன்று செய்ய உடன்பட்டோர் அது செய்யாவிடில் "பங்குனி மாதத்தில் பகல்வழிப்போவார் துன்பத்தை அடைவேனாக" என்று பிரதிக்கினை செய்யும் வழக்கம் முந்திய காலத்தில் இருந்தது.]

அ. கொடியதேளிடத்துவெங்கொடுக்கும்பாம்பின்கண்
விடமுறாஉம் பல்லுநேர் வெம் பகற்கணே
கடுமையார் வெப்பதி கரித்த நண்பக
லிடையினே வழிச்செல்வா ரிருவர் போந்தனர்.

(இ - ள்.) தேளினிடத்திலே கொடுக்கும் பாம்பினிடத்திலே விஷப்பல்லும் கொடியவைகளாக இருப்பதுபோல, பகற்காலத்தில் கொடியதான வெப்பம் மிகுந்த மத்தியான சமயத்

திலே, இரண்டு வழிப் போக்கர்கள் (மேற்கூறிய சுரத்தூடு) போவாராயினர்.

வெங்கொடுக்கு - கொடுமையான கொடுக்கு; ஆர் - நிறைந்த; நண்பகல் - நடுப்பகலிலே; வழிச்செல்வார் - பிரயாணம் செய்வோர்கள்; போந்தனர் - போனார்கள். தேளும் பாம்பும் பகலுக்கும், கொடுக்கும் பல்லும் நண்பகலுக்கும் உவமை.

[இதுகாறும் சென்ற எட்டுப் பாட்டுக்களில், குளிர் காலத்திலுங்கூட வெப்பஞ்செய்யும் ஒரு பாலைவனத்திலே அத்தியந்த உஷ்ணமுள்ள பங்குனி மாதத்திலே மற்றத் தினங்களிலும் அதிக வெப்பமாக விருந்த ஒரு தினத்திலே இரண்டு பிரயாணிகள் சென்றுகொண் டிருந்தார்கள் என்பது கூறப்பட்டது.]

கூ. சந்தித்தார் சில்வழி தாஞ்செல் காலையில்
முந்தித்தாம் பட்டன வெலா மொழிந்தனர்
பிந்தித்தாந் தங்கிடம் பெறுது மோவெனச்
சிந்தைத்தா பத்தினாற் றியங்கு செவ்வியில்.

(இ - ள்.) அவ்வாறு வழிச்சென்றவர்கள் சந்தித்துச் சிறிது தூரம் செல்லும்போது தாங்கள் இருவரும் அந்தக் கொடிய பாலைவனத்திலே பட்ட கஷ்டங்களெல்லாவற்றையும் பற்றிப் பேசினார்கள்; (அக்கஷ்டங்களை நினைந்து அதைரியம் அடைந்து) இனிமேல் தங்குதற்குத் தக்க இடமும் கிடைக்குமோவென்று தியங்கினார்கள். அப்படித் தியங்கிய சமயத்திலே,

சில்வழி - சிலவழி - சிறிது தூரம்; செல்காலையில் - சென்றபோது; மொழிந்தனர் - பேசினார்கள்; தங்கிடம் - தங்கும் இடம்; பெறுதுமோ - பெறுவோமோ; சிந்தைத் தாபம் - மனத்துன்பம்; செவ்வி - சமயம்.

கO. தரைநடு நெருப்பெனச் சாற்று மச்சுரத்
தெரிநடு நீரெனச் சேய்மை யெய்துமோர்
மரமிடை வனத்தினை வறியன் கண்டவோர்
இருநிதி யெனக்கண்டங் கெய்த வேகினர்.

(இ - ள்.) நிலத்தின் மத்தியிலே நெருப்பிருந்தாற்போல இருந்ததென்று சொல்லப்பட்ட சுரத்திலே, நெருப்பு மத்தியில் நீர் இருந்தாற்போன்ற ஒரு சோலையை, தரித்திரன் புதையலைக் கண்டது போலக்கண்டு அதிற் சேரும்படி போகலுற்றூர்கள்.

சேய்மை - தூரத்தில்; எய்தும் - பொருந்தியிருந்த; மரம் மிடை வனம் - மரங்கள் நெருங்கிய சோலை; வறியன் - தரித்திரன்; இருநிதி - பெரும்புதையல்; எய்த - அடைய.

கக. தரையிடம் பரவலாற் றரங்க வேலையோ
விருவிசும் பெய்தலா லெழிலி யேகொலோ
சுரநெடும் பகைதெறச் சூழ்ந் திரண்டுமோர்
உருவடைந் தனகொலென் றுளதச் சோலையே.

(இ - ள்.) அந்தச்சோலை, (காற்றினல் அலைபோல அலையும் கிளைகளும் இலைகளும் நெருங்கித்) தரைமேலே (இருண்டு) பரவியிருத்தலினல், அலைகளையுடைய சமுத்திரந்தானே வென்றும், ஆகாயத்தை அளாவி இருத்தலினல் மேகந்தானேவென்றும், அந்தச் சமுத்திரமும் மேகமும் அவைகளுக்கு நெடுங்காலமாகப் பகையாக உள்ள பாலைவனத்தை அழிக்க(த்தனித்தனியே சாத்தியப்படாதென்று) யோசனைசெய்து இரண்டும் சேர்ந்து ஓர் உருவெடுத்தனவோ என்று சொல்லும்படியாக இருந்தது.

தரங்கம் - அலை; வேலை - சமுத்திரம்; இருவிசும்பு - பெரிய வானம்; எய்தலால் - பொருந்துதலினல்; எழிலி எ

கொல் - மேகந்தானே ; சுரநெடும்பகை - சுரமாகிய நீண்ட காலப் பகையை ; தெற-அழிக்க; சூழ்ந்து - ஆலோசித்து.

[குளிர்ச்சி இருண்டநிறம் விசாலம் காற்றினால் அலைதல் என்ற இவைகள் சோலைக்கும் சமுத்திரத்துக்கும் மேகத்துக்கும் உள்ள பொதுத்தன்மைகள்.]

கஉ. விள்ளுறாஉம் புகையுண்டேல் வெய்ய தீயுண்டு
தெள்ளிதா நிலவுண்டேற் றிங்க ளுண்டிளம்
பிள்ளை தா முண்டெனிற் பெற்ற தாயுண்டீ
துள்ளதா னீருண்டென் றுள்புக் கார்சொல்வார்.

(இ - ள்.) புகையால் நெருப்பும் நிலவால் சந்திரனும், பிள்ளைகளால் தாயும் அனுமானிக்கப்படுதல்போல, இந்தச் சோலை இருப்பதனால் (இதன் உள்ளே) நீரும் இருக்கவேண்டும் என்று சொல்லிக்கொண்டு அவர்கள் அதனுள்ளே புகுந்து பின் வருவதைச் சொல்வாராயினர்.

விள்ளுறாஉம் - (தீயிலிருந்து) பிரியும்; உண்டேல் - உண்டென்றால் ; வெய்ய - வெப்பமான ; தெள்ளிதாம் - தெளிவான ; திங்கள் - சந்திரன் ; ஈது உள்ளதால் - இது இருத்தலினால் ; உள்புக்கார் - உள்ளே புகுந்து. (விள்ளுதல் கூறுதல் எனினும் அமையும்.)

கங. காந்திடு வெயினிலாப் புரையிக் காவினின்
மாந்திட நீர்தரு மரங்கள் பற்பல
ஆர்ந்திட வின்கனி யளிப்ப பன்மரம்
வேய்ந்திடு சீரையி விருக்க மெண்ணில.

(இ - ள்.) இயல்பாக வெப்பமாக உள்ள வெயில், நிலாவை யொத்திருக்கின்ற இந்தச் சோலையிலே, குடிக்க நீர் தருகின்ற (தென்னை முதலிய) மரங்கள் அனேகம்: உண்ணப் பழங்கள்

தருகின்ற மரங்கள் அனேகம்: உடுத்துக்கொள்ள (மரவுரியாகிய) உடைகளைக் கொடுக்கும் மரங்களும் அநேகம்.

காந்திடு - முதிர்ந்த வெப்பம் செய்கின்ற; நிலாப்புரை - நிலவை ஒத்திருக்கின்ற; கா - சோலை; மாந்திட - குடிக்க; ஆர்ந்திட - உண்ண; அளிப்ப - கொடுப்பன; வேய்ந்திடு - உடம்பை மூடும் - உடுத்துக் கொள்ளும்; சீரை, மரவுரிக்கும் சீலைக்கும் பொதுப்பெயர்; ஈ - கொடுக்கின்ற; விருக்கம் எண் இல - மரங்கள் எண்ணில்லாதன.

௧௪. வாயுவெப் புறுவெயின் மழை குளிர்க்குவீ
டேயுநற் பாழிப்பொந் தியை தருப்பல
நோயினைத் தெறுமர நோவுஞ் சாவுந்தீர்
காயசித் தியைத்தருந் தருக் கணக்கில.

(இ - ள்.) அன்றியும் காற்று வெயில் மழை குளிர் இவைகளுக்கு ஒதுங்கும் வீடுகள் போன்றிருக்கும் பெரும் பொந்துகளையுடைய மரங்கள் அநேகம். (வேர் பட்டை இலை பூக் காய் கனி முதலியவைகளால்) நோய் தீர்க்கும் மரங்களும் (வந்த நோய்களைத் தீர்க்குமட்டில் நில்லாமல் வரக்கூடிய) நோவையும் சாவையும் விலக்கும் காயகற்பத்தை அளித்துக் காயசித்தியை உண்டாக்கும் மரங்களும் அநேகங்களுள்ளன.

வாயு - காற்று; வீடு எயும் - வீட்டை ஒத்த; பாழிப் பொந்து - பெரிய மரப்பொந்து; இயை - பொருந்திய; தரு - மரம்; தெறும் - அழிக்கும்; தீர் - தீர்ந்த - நீங்கிய.

௧௫. ஓவின்று கண்டுகேட் டுண் டுயிர்த்துற
ஏர்வண்டி னிசைகள்கொங் கெய்தி மென்மையு
மேவியைம் புலனுக்கும் விருந்து செய்திடும்
பூவையம் பூவையாப் பொழிவ பன்மரம்.

(இ - ள்.) கண்ணாற் கண்டும் காதாற் கேட்டும் வாயால் உண்டும் மூக்கால் மோந்தும் உடலாற் பரிசித்தும் அனுபவிக்கும் இன்பங்களை முறையே கொடுக்க, அழகும் வண்டின் இசையும் தேனும் வாசனையும் மென்மையும் பொருந்தி ஐம்புலன்களுக்கும் விருந்து செய்யும் பூவையே (புஷ்பங்களையே) பூவையாக (மங்கையாக)க் கொடுக்கும் மரங்கள் அநேகங்களுள்ளன.

ஓவின்று - நீங்காமல்; உயிர்த்து - மோந்து; உற - பரிசிக்க; ஏர் - அழகு; வண்டின் இசை - வண்டின் ஒலி; கள் - தேன்; கொங்கு - வாசனை; மென்மை - மிருதுவான தன்மை; மேவி - பொருந்தி

["கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும் - ஒண்டொடி கண்ணே உள" என்ற குறளில் கூறியவற்றில் கேட்டற்குரியது ஒன்று நீங்கலாக மற்ற நான்கும் பூவின்கண்ணே இயல்பாக இருக்கின்றன. பூவில் வண்டுகள் தேனுண்ண வந்து ஒலி செய்யும்போது அந்தக் குறையும் நிரம்பிவிடுகின்றது.]

கசு. ஓவிய ரெழுதொணா வுருவ மேவிய
பாவைகள் பலபல பயக்கும் பன்மரம்
பூவுல கோரிறும் பூது கொண்டிடத்
தாவில்பல் மக்களைத் தருவ பன்மரம்.

(இ - ள்.) சித்திரகாரர்கள் சித்திரித்தற்கரிய வடிவம் உள்ள பாவைகளை (பாவைபோன்ற உருவமுடைய பூக்களாகிய பெண்மக்களை)த் தரும் (குரா) மரங்கள் அநேகங்களுள்ளன. யாவரும் அதிசயிக்கும்படி பல மக்களை (மானிட உருவமுள்ள பழங்களாகிய ஆண்மக்களை)த்தரும் (கிலுத்த) மரங்கள் அநேகங்களுள்ளன.

ஓவியர் - சித்திரமெழுதுவோர்; எழுதொணா - எழுதமுடியாத; பயக்கும் - கொடுக்கும்; இறும்பூது - ஆச்சரியம்; தாவில்-

குற்றமற்ற; பலமக்கள் என்பது, பழமாகிய ஆண்மக்கள் என்றும் அநேக ஆண்மக்கள் என்றும் பொருள்பட நிற்கின்றது.

[குரவ மலர் பெண்போல வடிவமுள்ளதென்பது தணிகைப் புராணம் நாட்டுப்படலம் ருச-வது பாட்டில் "குரவலர்ப் பாவை பெற்றெடுப்ப" என்பதனுலும் கிலுத்த மரக்காய், மக்களுடைய வடிவம் உள்ளதென்பது காஞ்சிப்புராணம் நகரேற்றுப் படலம் கரு-வது பாட்டில் "...புலி...கிலுத்த நெடுந்தருத் தம் பழம்...மானிடர் போன்மென வெகுண்டு புடைத்து..." என்பதனுலும் விளங்கும்.]

கஎ. விண்ணுல கெய்திட விரும்பு வீரெலாம்
அண்ணியெம் வழியஃ தடைமி னென்பபோற்
கண்ணுற வொணுதுமீக் கதித்த தாருவிம்
மண்ணவர் விண்ணுற வைத்த வேணியோ.

(இ - ள்.) 'மேற்கூறிய பேறுகளேயன்றி விண்ணுலகை அடையும் பேற்றையும் பெற விரும்புவோர்களெல்லாம் எம்மை வழியாகப் பற்றி (எம்மேல் ஏறிச்சென்று) அந்த மேலுலகத்தைச் சேருங்கள்' என்று சொல்வனபோலக் கண்ணுக்கெட்டாமல் மேனேக்கிக் கதித்தோங்கி வளர்ந்த இந்த மரங்கள், மண்ணுலகத்திலிருந்து விண்ணுலகத்துக்கு ஏறிச் செல்ல வைத்த ஏணிகளோ என்று சொல்லும்படி இருக்கின்றன.

எய்திட - சேர ; அண்ணி - எம்மைச் சார்ந்து; அடைமின் - சேருங்கள்; என்பபோல் - என்று சொல்வனபோல; கண்ணுற - பார்க்க; மீக்கதித்த - மேலே வளர்ந்தோங்கிய; தாரு - மரங்கள்.

கஅ. ஒண்மல ரெண்ணில இலைக ளூடொளிர்ந்
தண்முவ வமரர்கோ ஞகை மெங்கணும்
கண்மல ரொளிர்வன கடுக்கு மன்றெனில்
விண்மிசை மீனின மிளிர்வ போலுமே.

(இ - ள்.) இந்த மரங்களிலே இலைகளினிடையே எண்ணிறந்த மலர்கள் இருப்பது, இந்திரன் தேகமெங்கும் கண்கள் விளங்குவதொக்கும்; அன்றேல், ஆகாயத்தில் நட்சத்திரங்கள் பிரகாசிப்பது போலும்.

அண்முதல் - பொருந்துதல் ; கடுத்தல் - ஒத்தல்.

௩௯. உண்டிட வுடுத்திட வொதுங்க நோய்தெறப்
பெண்டொடு பிள்ளைகள் பெறவின் னெய்திட
ஒண்டரு வுதவுவ வுதவி வேறுண்டோ
விண்டரு விவையொப்ப மேன்மை மேயவோ.

(இ - ள்.) இவ்வாறாக, இம்மரங்கள் (௩௩-வது பாட்டிற் கூறியபடி) தாகத்துக்குக் குடிக்க இளநீராகிய நீரும் பசிக்குச் சாப்பிடப் பழங்களாகிய உணவும் உடுத்த மரவுரியாகிய உடையும் தருகின்றன ; மேலும் (௩௪-வது பாட்டிற் கூறியபடி வெயில் மழை பனி இவைகளுக்கு ஒதுங்க மரப்பொந்தாகிய வீடும் வந்தநோய் தீர்க்க மருந்தும் வருநோய் விலக்கக் காய கற்பமும் கொடுக்கின்றன ; அன்றியும் (௩௶, ௩௫ - பாட்டுக்களின்படி, வண்டிசைக்கப்பெற்று, ஐம்புலன்களையும் இன்பம் நுகரச் செய்யும் குணத்தினால் ஸ்திரீகளை ஒத்த புஷ்பங்களும், வடிவத்தினால் பெண்பிள்ளைகளையும் ஆண்பிள்ளைகளையும் முறையே ஒத்த குராமரப் பூக்களும் கிலுத்தமரப் பழங்களும் ஆகிய) பெண்டு பிள்ளைகளை அளிக்கின்றன ; அல்லாமலும் (௩௭-ம் பாட்டுப்படி) கண்ணுக்கெட்டாதபடி அதி உன்னதமாக வளர்ந்து தம்மேலேறிச் செல்வோர் விண்ணை அடையவும் உதவுகின்றன. மேற்கூறிய உதவிகளிலும் அதிகமாக வேறு உதவி உண்டோ? இல்லை. (வண்டுகள் உண்ண உதவாத பொன் மலர்களையும் யாவரும் தின்னலாகாத பொற்கனிகளையும் உடைய) கற்பக தருக்கள் இம்மரங்களோடு ஒப்பாகத்தக்க மேன்மை பொருந்தியவைகளோ? அல்ல.

தேற - கெடுக்க - தீர்க்க ; விண் எய்திட - மேலுலகத்தை அடைய; ஒண்தரு - அழகிய மரங்கள்; உதவுவ - உதவுகின்றன; விண்தரு - கற்பக தருக்கள்; இவை ஒப்ப - இவைகளுக்கு உவமானமாக (த்தக்க); மேயவோ - பொருந்தியனவோ.

[தென்னையே யன்றித் தாகத்துக்கு உதவும் வேறு மரங்களும் உண்டு. விசிறி வாழை என்ற ஒருவகை வாழை, மட்டையில் தண்ணீர் சேகரித்து வைத்துப் பிரயாணிகளுக்கு உதவுகின்றது. அதனால் அதற்குப் பிரயாணி மரம்[1] என்றும் பேர் உண்டு. டெமாராப் பசுமரம்[2] தென் அமரிக்காப் பசுமரம்[3] என்ற இரண்டுசாதி மரங்கள் பசுவின்பால் போலப் போஷகமான பாலைத் தருபவை.

உ0. இந்திர னொருவற்கு வேண்டிற் றீந்திடும்
ஐந்தரு வென்பயார் அவற்றைக் கண்டனர்
பைந்தரு விவண்பல பலர்க்கும் பல்லவும்
நைந்திர வாமலே நல்கல் காணலாம்.

(இ - ள்.) தேவலோகத்திலே உள்ள சோலையிலே கற்பக தரு முதலிய ஐந்து மரங்களுள்ளனவென்றும் அவைகள் இந்திரனொருவனுக்கு (மட்டும் கொடுக்குமென்றும் அப்படிக் கொடுப்பதிலும்) அவன் கேட்பதை மட்டும் கொடுக்குமென்றும் சொல்லக் கேட்டிருக்கிறோ மன்றிப் பார்த்தேமல்லேம். இந்தச் சோலையிலோ, எண்ணிறந்த மரங்கள் தம்பால் வந்த பலருக்கும் (மேலே கூறியவாறு) பல பொருள்களையும் அவர்கள் வருந்திக் கேளாமலே தருவதைக் காணலாம்.

---

1 Water-tree or Traveller's-tree
2 Cow-tree of Demerara.
3 Cow-tree of South America.

வேண்டிற்று - வேண்டினதை ; என்ப - என்று சொல்வார்கள் ; பல்லவும் - பலவும் - பல பொருள்களையும்; நல்குதல் - கொடுத்தல்.

உக. பைந்தழை கிளைநிழ றந்து பட்டபின்
வெந்துவெங் குளிரொடு மிருகம் போக்கிடும்
சுந்தர மரமுயிர் துறந்து மென்பினை
இந்திரன் கொளவரு டதீசி யேய்க்குமே.

(இ - ள்.) இம்மரங்களின் இலைகளும் கிளைகளும் பச்சையாக உயிரோடிருக்கும்போது நிழல்கொடுத்து உதவுகின்றன, இறந்து பட்ட பின்பு குளிர்காய எரிக்கும் சருகாகவும் இரவில் மிருகங்களை வெருட்டி யோட்டும்படி வேலி போலப் போட்டு எரிய விடும் விறகாகவும் உதவுகின்றன. ஆதலால், இம்மரங்கள், சீவந்தராகவிருந்தபோது பல வகையில் பிறர்க்கு உபகாரப்பட்டு இறந்தபோது தமது முதுகெலும்பை இந்திரனுக்கு வச்சிராயுதமாக உதவிய ததீசி முனிவரை ஒக்கும்.

பைந்தழை - பச்சை இலை; துறந்து - நீங்கி; என்பு - எலும்பு ; ஏய்க்கும் - ஒக்கும்.

[ததீசி முனிவர் சரித்திரம் திருவிளையாடற் புராணத்தில் கூறப்பட்டுள்ளது.]

உஉ. உயிரில்பல் பொருளினு முயர்ந்து தம்மைப்போல்
உயிருட னுணர்ச்சியு முள சரங்களுக்
குயிரெனு முணுமுத லளித் துவற்றினூஉங்
குயிர்நெடுங் காலமன் னுறுவ தாவரம்.

(இ - ள்.) (புல் பூண்டு கொடி செடி மரம் இவைகளை உள்ளிட்ட) தாவரங்கள், உயிருடைமையினல் உயிரில்லாத எல்லாப்

பொருள்களைக் காட்டிலும் மேன்மை யுள்ளவைகளாய், தம் மைப்போல உயிரோடு உணர்ச்சியும் ஒருங்கே உள்ள, நிலை பெயர்ந்து சரிக்கும் இயல்பை உடைய சரப்பொருள் (களாகிய பிராணி)களுக்கு உணவு முதலியவற்றை உதவி, அப்பொருள் களைக் காட்டிலும் நீண்டகாலம் ஜீவிக்கும் பெருமை யுடைய வைகள்.

இல் - இல்லாத; பல் - பல, உள - உள்ள; சரங்கள் - பிரா ணிகள்; உணு - உணவு; முதல் - முதலானவைகள்; அளித்து - கொடுத்து; உவற்றின் ஊங்கு - அந்தப் பிராணிகளிலும் அதிக மாக; மன்னுறுவ - நிலைபெற்றிருப்பன.

[மாம்ஸத்தையே ஆகாரமாக உடைய சிங்கம் புலி முதலிய மிருகங்களும் அம்மாம்ஸத்தைத்தரும் மான் முதலிய மிருகங்க ளில்லாமல் உயிர் வாழ்தல் கூடாது. ஆதலால் மாம்ஸ பக்ஷ ணஞ் செய்யுமுயிர்களும் உயிர் வாழ்வுக்குத் தாவரங்களையே மூலாதாரமாகக் கொண்டுள்ளன. அன்றியும் பிராணிகள் சுவா சத்தால் வெளியே விடும் வாயுவில் உள்ளதும் பிராணிகளுக்கு வேண்டாததாயிருப்பதே யன்றிக் கெடுதி செய்வதுமாகிய கரி அமில வாயுவைத் தாவரங்கள் கிரகித்து அந்தக் கலப்புப் பொருளான கரியமில வாயுவைக் கரிச்சத்து வேறு பிராண வாயு வேருகப் பிரித்துக் கெடுதி யற்றதாக்கிக் கரிச்சத்தைத் தாம் உபயோகித்துக்கொண்டு பிராணவாயுவை வெளியே விட்டு விடுகின்றன. பிராணிகளுக்குப் பிராணுதாரமான அந் தப் பிராணவாயுவோ, சாதாரண வாயுவோடு கலந்து, பிராணி கள் உள்வாங்கும் சுவாசத்தோடு உடம்பினுள்ளே சென்று பிர யோசனப்படுகின்றது. எகிப்து தேசத்தில் அநேக ஆயிர வரு ஷங்களுக்கு முன் சேமஞ் செய்யப்பட்டிருந்து வெளியே எடுக் கப்பட்ட சில தானிய விதைகள் விதைக்கப்பெற்று முளைத்தன. பல்லாயிர வருடங்கண்ட மரங்கள், சில இடங்களில் உள்ளன.]

உங. அன்றியு மெப்பெருஞ் சாமு மாகத்தின்
ஒன்றிய பருமையி னுயரத் தொவ்வுரு
இன்றரு வுயர்வெலா மிசைக்க லாவதோ
என்றனர் வனத்தினு ளேக லுற்றனர்.

(இ - ள்.) மேலும் யானை முதலிய நிலத்தில் வாழும் பிராணிகளாயினும் ஆகுக, திமிங்கிலம் முதலிய நீரில் வாழும் பிராணிகளாயினும் ஆகுக, எந்தப் பெரிய பிராணிகளும் பருமையிலும் உயர்ச்சியிலும் ஒப்பாகமாட்டாத மரங்களின் சிறப்புக்கள் அனைத்தையும் சொல்ல முடியுமோ? முடியாது என்று சொல்லி (மேற்கூறிய பிரயாணிகள்) அச்சோலையின் உள்ளே போவாராயினர்.

ஆகம் - உடல்; ஒன்றிய - பொருந்திய; ஒவ்வுரு - ஒப்பாகாத; இன்தரு - இனிய மரங்கள்; இசைக்கலாவதோ - சொல்ல முடியுமோ; வனம் - சோலை.

[யானைகளினும் பெரிய காத்திரம் உடைய பிராணிகள் முன் ஒரு காலத்தில் இந்தப் பூமியில் வாழ்ந்த உண்மை, மண்ணின் கீழே கண்டெடுக்கப்பட்டிருக்கிற அந்தப் பிராணிகளின் எலும்புகளினால் விளங்குகின்றது. அப்படிப்பட்ட பிராணிகளும் பெரிய மரங்களோடு ஒப்பிடத்தக்க பரிமாணம் உடையவைகளல்ல. ஏறக்குறைய(ச்சாதி அடியால்) நூறடிச் சுற்றளவுள்ள மரமும் உண்டு.]

உச. நேமிசூழ் தந்தவிந் நில வரைப்பினே
பூமிசூழ் தந்தவோர் புணரி யுண்டென
வாமமார் சுனையொன்றவ் வனத்துண் மேவுதல்
ஏமமா நோக்கிநீ ரினி தருந்தினர்.

(இ - ள்.) கடலினாற் சூழப்பட்ட இந்தப் பூமியிலே பூமியி னாற் சூழப்பட்ட கடல் ஒன்றுண்டென்று சொல்லும்படி, விசாலமான ஒரு தடாகம் அச்சோலை மத்தியில் இருக்கக் கண்டு, அதிலே அவர்கள் தண்ணீர் குடித்தார்கள்.

நேமி - சமுத்திரம் ; சூழ்தந்த - சூழ்ந்த ; புணரி - சமுத் திரம் ; வாமம் - அழகு ; ஏமம் - இன்பம்.

உரு. தூரினான் மலையெனத் தோன்றிச் சாகையாற்
பாரினார் திசைகளை அளந்து பாதலம்
வேரினா லளந்துமேல் விண் ணளக்கநீர்ச்
சாரினோங் கொருதருச் சார்ந்து வைகினார்.

(இ - ள்.) ஒருமரம், தூர் பெரிதாய் மலைபோலத் தோன்ற, கிளைகள் திக்குக்களை அளக்கச் செல்கின்றவை போல நீண்டு பரவ, வேர்கள் பாதாளத்தை அளப்பவைகள்போல ஆழமாக உற, மேற்பாகம் விண்ணை அளக்கப்போவது போல உயர்ந் தோங்கி வளர, மேற்கூறிய தடாகத்தின் நீரருகே கரையிலே நின்றது. அதன் அடியில் அவர்கள் இருந்தார்கள்.

சாகை - கிளை; பாரின் ஆர்திசை - பூமியில் பொருந்திய திக்குகள் ; பாதலம் - பாதாளம் ; மேல் - மேற்பாகம் ; விண் - வானத்தை ; நீர்ச்சாரின் - (தடாகத்தின்) நீர்ப்பக்கத்திலே - ஓங்கு - வளர்ந்தோங்குகின்ற ; சார்ந்து - சேர்ந்து ; வைகி னார் - தங்கினார்கள்.

உசு. அலையெறி துளிகளோ டவற்றின் றண்மையும்
மலர்நறுந் தாதொடு மணமும் வாரிவந்
துலவுமென் காலினா லுடலின் வெம்மைதீர்ந்
தொலையயர் வுயிர்த்தலு மொருவன் கூறுவான்.

(இ - ள்.) அத்தடாகத்தின் அலைகள் எறியும் சிறிய நீர்த் துளிகளோடு அந்த அலைகளின் குளிர்ச்சியையும், அத்தடாகத்து மலர்களிலுள்ள மகரந்தப் பொடியோடு வாசனையையும் வாரிக் கொண்டு வந்து உலாவுகின்ற காற்றினால் அவர்கள் தேகவெப் பஞ் சீக்கிரமாகத் தீர்ந்து இளைப்பாறினார்கள். இளைப்பாறிய உடனே அவர்களுள் ஒருவன் பின் வருவதைச் சொல்வானா யினான்.

தண்மை - குளிர்ச்சி ; தாது - மகரந்தப்பொடி ; மென் கால் - இளங்காற்று ; ஒலை - ஒல்லை - சீக்கிரம் ; அயர்வுயிர்த் தலும் - தளர்ச்சி தீர்ந்த உடனே.

[காற்று, கண்ணுக்கு விளங்கும் நீர்த்துளியையும் மகரந் தப் பொடியையும் வாரிக்கொண்டதுபோலக் கட்புலனாகாத குளிர்ச்சியையும் வாசனையையும் கொண்டதென்பது கூறப் பட்டது.]

உஎ. நாகபா சத்தினா லிராம னற்படை
சாகுமேல் வையினாயிர் தழைக்கப் புள்ளர
சேகி வீசிய சிறைக் காற்று மேய்க்குநம்
சோகநீங்கிட வுலாஞ் சுகந்த மாருதம்.

(இ - ள்.) இராமனுடைய சேனை இந்திரசித்து விட்ட நாகபாசத்தினால் கட்டுண்டு மாயுஞ் சமயத்தில் வந்துசேர்ந்த கருடனுடைய சிறகின் காற்று, அந்தச்சேனையை உயிர்பெற்று எழும்படி செய்தது. நமது சோகத்தை நீக்கிய இந்தக் காற்று, அப்படிச் செய்த கருடன் சிறைக்காற்றை ஒத்திருக்கின்றது.

சாகும் எல்வை - சாகுந் தருணம் ; புள்அரசு - கருடன் ; சிறை - சிறகு ; மாருதம் - காற்று.

உஅ. மீண்டுமெவ் வனிகமே வேத னம்பினல்
மாண்டிட மறித்துயிர் மருவ வீசிய
தேண்டியெய் தரியசஞ் சீவிக் காற்றையும்
ஈண்டுல விம்மருத் தினிது நேருமே.

(இ - ள்.) திரும்பவும் அந்தப்படை தானே, பிரமாஸ்திரத்தினல் மாண்டபோது (அனுமானற் கொண்டுவரப்பட்ட சஞ்சீவி மலையினின்றும் அந்தச் சேனைக்குத்) திரும்ப உயிர்வரும்படி வீசிய சஞ்சீவிக் காற்றையும் இங்கு உலாவும் காற்று ஒத்திருக்கின்றது.

மீண்டும் - திரும்பவும் ; அனிகம் - படை ; வேதன் - பிரமன் ; மறித்து - திரும்ப ; தேண்டி - தேடி ; எய்தரிய - எய்த அரிய - அடைவதற்கு அருமையான ; சஞ்சீவி - உயிர்தரும் மருந்து ; ஈண்டு - இங்கு ; உலவு - உலாவுகின்ற ; இம்மருத்து - இந்தக்காற்று ; இனிது - இனிமையாக ; நேரும் - ஒக்கும்.

உகூ. பயிலலை தாளமாக் குயில்கள் பாடிட
மயினட மாடப்பன் மரங்கள் பூங்கையால்
தயையின்வெண் டாதுசெந் தாது தானமாப்
பெயநட சாலைபோற் பிறங்கு மிப்பொழில்.

(இ - ள்.) குயில்கள் பாடகர் போலப் பாட, அலைகள் தாளம் தட்டுவோர்போல ஓசைசெய்து தாளம்போட, மயில் கூத்தியர் போல ஆட, கூத்துக்காண்போர் சந்தோஷித்துக் கைகளில் வெள்ளிக்காசுகளும் பொற்காசுகளும் வாரிப் பரிசாகச் சொரிவதுபோல, மரங்கள் மலர்களாகிய கைகளால் வெண்தாது செந்தாதுகளை (வெள்ளை மகரந்தப் பொடி சிவப்பு மகரந்தப் பொடியாகிய வெள்ளியையும் பொன்னையும்) சொரிய, இந்தச் சோலை நடனசாலைபோல விளங்குகின்றது.

தயையின் - அன்பினுல் ; தாது, பூந்தாதுக்கும் பொன் முதலிய உலோகங்களுக்கும் பொதுப் பெயர் ; தானமா - தான மாக - சன்மானமாக; பெய - பெய்ய - சொரிய ; பிறங்கும் - விளங்கும்.

[வெண்டாது, வெண்ணிறமுள்ள பூந்தாதுக்கும் வெள்ளிக் கும் பொதுப் பெயர் ; செந்தாது செந்நிறமுள்ள பூந்தாதுக்கும், பொன்னுக்கும் பொதுப்பெயர்.]

ங௦. பொழிலெனும் பெயரிது பூண்ட காரணம்
பொழிலெனும் பெயருடைப் பூமித் தாயருள்
பொழிபுபல் லுயிர்க்கருள் பொருள்க ளியாவுந்தான்
பொழிதல்செய் துயிரெலாம் போற்றல் போலுமே.

(இ - ள்.) மேலே (உகூ-வது பாட்டில்) கூறியபடி இந்தச் சோலை பொழிலென்று ஒரு பெயர் பெற்றதற்குக் காரணம், இச்சோலையைப் போலவே பொழில் என்னும் பெயருடைய பூமியாகிய தாய் தான் பெற்ற சகல ஜீவகோடிகளுக்கும் உயிர் வாழ்வதற்கு உதவியாகக் கொடுக்கும் எல்லாப் பொருள்களை யும் இச்சோலை (கங-உஉ-பாட்டுக்களிற் கூறியபடி) தானும் கொடுத்து எவ்வுயிர்களையும் காப்பாற்றுவது போலும்.

பொழில், சோலைக்கும் பூமிக்கும் பொதுப்பெயர் ; பெய ருடை - பெயரை உடைய ; பூமித்தாய் - பூமியாகியதாய் ; பொழிபு - பொழிந்து - கொடுத்து.

ஙக. கண்ணுறக் கண்களைக் கறங் கலைத்தொனி
ஒண்ணுறச் செவிகளை யுற வுடம்பினை
உண்ணுறத் தாலைத்தண் ணுறுத் துளத்தையும்
எண்ணுறக் குளிர்வித்த திந்த வாவியே.

(இ - ள்.) இந்தத் தடாகம் தன்னைப் பார்க்கக் கண்களையும் அலையோசை கேட்கக் காதுகளையும் பரிசிக்க உடலையும் உண்ண நாக்கையும் குளிர்வித்தது ; அன்றியும் நினைக்கவே கட்புலனுகாத கருத்தையுமே குளிர்வித்தது.

கண்ணுற - பார்க்க ; கறங்குதல் - ஒலித்தல் ; ஒண்ணுற - பொருந்த ; உற - பரிசிக்க ; உண்ணுற - உண்ண ; தாலே - நாக்கை ; தண்ணுறுத்து - குளிர்வித்து ; உளம் - மனம் ; எண்ணுற - நினைக்க ; வாவி - தடாகம்.

கண்டதும் கேட்டதும் தொட்டதும் உண்டதும் எண்ணியதும் நிகழ்ந்த முறையே கூறப்பட்டிருத்தல் கவனிக்கத் தக்கது.

௩௨. மேவுறு பொருள்களெவ் வெவையும் வேவுறீஇ
வீவுறு விக்குமிவ் வெஞ்சு ரத்திடைச்
சாவுறு நமக்குயிர் தருவ துன்னியோ
ஆவியென் றறைந்தன ரிதனை யான்றவர்.

(இ - ள்.) தன்னிடத்திலே வந்து சேர்ந்த எல்லாப் பொருள்களையும் வெந்து நாசமடையச் செய்கின்ற இந்தக் கொடிய சுரத்திலே சாக இருந்த நமது உயிரை இது காக்கப் போகிறதென்று தெரிந்தோ, இதனை ஆவி என்று மேலோர் கூறினுர்.

வேவுறீஇ - வேவுற்று - வெந்து ; வீவு - சாவு - அழிவு ; உன்னியோ - எண்ணியோ ; ஆவி, தடாகத்துக்கும் உயிருக்கும் பொதுப் பெயர் ; ஆன்றவர் - கற்றபெரியோர்.

௩௩. மத்தியத் தசைவின்றி வண் கரைக்கயற்
றத்தலைத் திரள்புரள் தருமிவ் வாவிதான்
சித்தநிச் சலமுறீஇச் செகத்தை யாண்டருள்
மெய்த்தவச் சனகனு தியரை வீழுமே.

(இ - ள்.) சமுத்திரத்தினுள்ளே, கரையினின்றும் தூரமாகச் செல்லச் செல்ல, அலைகுறைந்து நெடுந்தூரம் சென்றபின் அலை சிறிதாயினும் இல்லாதிருக்கும் ; அதுபோல, விசாலமாகிய இத்தடாகமும் மத்தியில் அசைவில்லாமல் கரை அருகே அலை வீசாநின்றது ; அதனால், அகக் கரணங்கள் முற்றுந் தொழிலற்று மனம் ஓய்ந்திருக்க, புறக் கரணங்களாகிய வாக்கு நோக்கு முதலியவைகளால் சகல இராச காரியங்களையும் நடத்தி உலகத்தை ஆண்ட சனகராஜன் முதலிய யோகீசுவரரை இந்தத் தடாகம் ஒத்திருக்கின்றது.

வண்கரைக்கு அயல் - வளப்பமுள்ள கரை அருகே; தத்து அலை - தத்துகின்ற அலை; ஆவி - தடாகம் ; உறீஇ - உற்று ; சித்த நிச்சலம் - சித்தத்தின் அசைவின்மை ; செகம் - பூமி ; வீழும் - ஒக்கும்.

நுச. இத்தடத் தம்மரை யிலைவின் ணேய்த்தது
மத்தியிற் சங்கிள மதியை நேர்ந்தது
நத்துயிர்த் திடுமணி நளிரு நீர்த்துளி
மொய்த்தவக் ககனமீன் முழுது மொத்தவே.

(இ - ள்.) இந்தத் தடாகத்திலே அதோ தோன்றுகின்ற தாமரை இலை (இருண்ட நிறமும் வட்டவடிவமும் உள்ளதாக இருப்பதனால்) வானத்தை ஒத்திருக்கின்றது ; அந்த இலையின் மத்தியிலிருக்கும் சங்கு (நிறத்தினாலும் வடிவத்தினாலும்) இளஞ் சந்திரனை ஒத்திருக்கின்றது ; அந்தச் சங்கின் முத்துக்களும் அந்த இலையில் நெருங்கியுள்ள நீர்த்துளிகளும் நக்ஷத்திரங்களை ஒத்திருக்கின்றன.

தடம் - தடாகம் ; அம்மரை இலை - அந்தத் தாமரை இலை ; ஏய்த்தது - ஒத்தது ; மதி - சந்திரன் ; நேர்ந்தது - ஒத்தது ; நத்து - சங்கு ; உயிர்த்தல் - ஈனல் ; நளிர்தல் - குளிர்தல் ;

மொய்த்த - நெருங்கிய ; ககனம் - விண் ; மீன் - நக்ஷத்திரம்; முழுதும் - பூரணமாக.

௩௫. சுற்றும்வெஞ் சுரமுறு சோலை சூழ்தடம்
வெற்றிரு விசும்பிடை மேக மத்தியில்
உற்றெளிர் மதியினை யொக்கும் பாசியின்
கற்றையம் மதியுறு களங்க மானுமே.

(இ - ள்.) (பாழான) பாலைவனத்தினாலே சூழப்பட்ட சோலையின் மத்தியிலே இருக்கின்ற இந்தத் தடாகம், எப்பக்கங்களிலும் வெறு விசும்பு சூழ அவ் விசும்பின் மத்தியிலே உள்ள மேகத்தின் நடுவில் விளங்கும் சந்திரனை ஒத்திருக்கின்றது; அத்தடாகத்திலுள்ள பாசித்திரள், அச்சந்திரனிடத்துள்ள களங்கத்தை ஒத்திருக்கின்றது.

சுற்றும் - சுற்றுப் புறமுழுதும்; வெஞ்சுரம் - உட்டணமான பாலைவனம் ; தடம் - தடாகம் ; வெறு இரு விசும்பு இடை - வெறுமையான பெரிய வானத்தின் மத்தியில் உள்ள ; ஒளிர் - பிரகாசிக்கின்ற; மதி - சந்திரன் ; கற்றை - திரள்; மானும் - ஒக்கும்.

பாலை சோலை தடாகம் பாசி இவைகளுக்கு முறையே வானம் மேகம் சந்திரன் களங்கம் உவமிக்கப்பட்டன.

௩௬. விண்ணமும் விண்ணிடை மேவும் யாவுந்தன்
கண்ணுற விளங்கித்தன் கண்ண தொன்றும்விண்
நண்ணுத லிலாதவித் தடத்து நன்கொளிர்ந்
தண்ணுமவ் விண்ணிறத் தழகை யென்சொல்கேன்.

(இ - ள்.) இத்தடாகம், வானமும் வானத்தில் உள்ள சூரியன் சந்திரன் முதலிய சகல பொருள்களும் தன்னிடத்திலே

(பிரதி பிம்பங்களாக) விளங்கப் பெற்றிருக்கின்றது. வானத்திலோ, இத்தடாகமாவது இதனினுள்ள பொருள்கள் யாதாயினு மொன்ருவது காணப்படவில்லை. இப்படிப்பட்ட மேன்மையுடைய இந்தத் தடாகத்திலே விளங்குகின்ற அந்த வானத்தின் நீலநிறத்தின் அழகை யான் என்னென்று சொல்லுவேன்.

விண்ணம் - வானம்; தன்கண்ணது - தன்னிடத்தில் உள்ளது; விண் நண்ணுதல் இலாத - வானத்தில் இல்லாத; நன்கொளிர்ந்து - நன்ருக விளங்கி; சொல்கேன் - சொல்லுவேன்.

௩எ. ஆழியு மாழியி லமரு மாயனும்
பாழிய வாழியுட் பறம்பு மத்தினைச்
சூழுற மதித்தநாட் டோன்று மாலமும்
வீழுமிங் கொளிர்தரு விண்ணின் வண்ணமே.

(இ - ள்.) சமுத்திரத்தின் நிறத்தையும், அதிலே (துயில் கொண்டு) தங்கும் திருமாலின் நிறத்தையும், அதில் (அமிர்தம் பெறும்பொருட்டு அத்திருமால் தலைவனுகத் தேவரும் அசுரரும்) மந்தரமலையை மத்தாக்கி அம்மலை சுழலும்படி கடைந்த காலத்திலே (அவ்வமிர்தம் உண்டாகுமுன்) வெளிப்பட்ட விஷத்தின் நிறத்தையும் இத்தடாகத்தில் விளங்கும் ஆகாயத்தின் நிறம் ஒக்கும்.

ஆழி - சமுத்திரம்; மாயன் - விஷ்ணு; பாழிய - விசாலம் உள்ள; பறம்பு - மலை; மதித்த - கடைந்த; ஆலம் - விஷம்; வீழும் - ஒக்கும்; இங்கு - இத்தடாகத்திலே.

[வானத்தின் நிறத்துக்குக் கடலை உவமித்த விடத்து அதனேடு சம்பந்தம் உள்ள திருமாலை உவமான மாக்கியதேயன்றி, அக்கடல் திருமால் என்னும் இருபொருளுடனும் சம்பந்தப்பட்ட விஷத்தையும் ஒப்பாகக்கொண்டது கூறப்பட்டது.]

௩அ. அனறியு மனையவின் ணத்து வண்ணஞ்சீர்
துன்றிய பூவையின் தூய பூவுமோர்
குன்றலில் பேரொளி குலவு நீலமும்
மன்றல்கொ ணெய்தலு மானு மன்றவே.

(இ - ள்.) மேலும் அந்த வானத்தின் நிறம், காயாமலர் நீலமணி நீலப்பூ இவைகளின் நிறத்தையும் நேரும்.

அனைய - அப்படிப்பட்ட; விண்ணத்து - வானத்தினுடைய; துன்றிய - நெருங்கிய ; நீலம் - நீலரத்தினம் ; மன்றல் கொள் - வாசனை கொண்ட ; நெய்தல் - நீலமலர் ; மானும் - ஒக்கும் ; மன்ற - நிச்சயமாக ; ஏ - அசை.

௩௯. இன்னும்வா னிறத்தினை யேய்ப்ப யாவெனிற்
கன்னிமா மஞ்ஞையின் காமர் கண்டமும்
பின்னுமே யதன்பகை யென்னப் பெற்றுநான்
நென்னல் காண் கோம்பியி னீல மேனியும்.

(இ . ள்.) இன்னமும் அவ்விண்ணின் நிறத்தை ஒக்கும் பொருள்கள் யாவை யென்றால், அவை வருமாறு.—மயிலின் கழுத்தும் மயிலுக்குப் பகையென்று சொல்லப் பெற்றதும் நான் நேற்றுக் கண்டதும் ஆகிய கோம்பியினது நீல நிறம் படைத்த உடம்பும்.

ஏய்ப்ப - ஒப்பவைகள் ; யா - யாவை ; கன்னி - இளமையுடைய ; மா - பெருமையுடைய ; மஞ்ஞை - மயில் ; காமர் - அழகிய ; கண்டம் - கழுத்து ; நென்னல் - நேற்று ; காண் - கண்ட ; கோம்பியின் - கோம்பியென்ற ஓந்தியினுடைய ; மேனி - உடம்பு.

சo. என்னவே றுவமங்க ளெடுத் தியம்பிடு
முன்னிறீ இ யடுத்தவன் மொழிவன் கோம்பிபோன்ம்
அன்னவா னெனல்பிழை யாகு மையநீ
பன்னுகோம் பியினிறம் பச்சை தேர்தியால்.

(இ - ள்.) என்று சொல்லி முதற் பிரயாணி வேறேயும் உவமானப் பொருள்கள் கூறத் தொடங்குகையில் இரண்டாம் பிரயாணி இடையே தடுத்துப் பின் வருவதனைச் சொல்வானுயி னுன்.—கோம்பி ஒப்பாகாது ; நீ கூறிய மற்றெல்லாப் பொருள் களும் ஒக்கும் ;'கோம்பியின் நிறம் பச்சை.; இதனைத் தெரிந்து கொள்வாயாக.

உவமம் - உவமானப் பொருள் - ஒப்பான பொருள் ; இயம்பிடும் முன் - சொல்லுமுன்னுக ; நிறீஇ - நிறுத்தி ; அடுத்த வன் - அடுத்த பிரயாணி ; மொழிவன் - சொல்லுவான் ; போன்ம் - போலும் ; தேர்தி - தேர்வாய் ; ஆல் - அசை.

[கோம்பியின் நிறம் நீலம் என்று முதற்பிரயாணி கூறிய தனை இரண்டாம் பிரயாணி மறுத்துத் தான் பச்சை என்றதற் குத் தக்க நியாயம் சொல்லப்புகுந்து, தான் அந்தச் செந்துவை நன்ருகத் தெரிந்திருப்பதை நிரூபித்தற்கு அந்தச் செந்துவின் வடிவ வருணனையையும் தான் அதைப் பார்த்த இடத்தையும் காலத்தையும் பின்வருமாறு விவரித்துக் கூறுகின்ருன்.]

சக. அதனினு மற்புத மான செந்துவிம்
மதிகதிர் வழங்குறும் வைய கத்திலே
சிதலேதின் பல்லியி னெடிய தேகமும்
விதிர்பணி நாவுமீன் றலேயு மேயது.

(இ - ள்.) சூரிய சந்திரர் வழங்கப்பெற்ற இந்தப் பூமண் டலத்திலே அந்தக் கோம்பியிலும் ஆச்சரியமான செந்து கிடை

யாது. பல்லியினது நீண்ட தேகம்போன்ற தேகமும் பாம்பின் நாக்குப்போலப் பிளவுபட்ட நாவும் மீனுடைய தலைபோன்ற தலையும் அதற்குண்டு.

மதிகதிர் - சந்திரன் சூரியன் ; வையகம் - பூமி ; இலை - இல்லை ; சிதலை - கறையான் ; தின் - தின்னும் ; விதிர் - (கண்டோர் அஞ்சி) நடுங்குகின்ற ; பணி - பாம்பு ; மேயது - பொருந்தியது.

சஉ. அதுகொண்ட பதங்கவ ராக மூவிரல்
ததைவின்றி யுளதுவால் சால நீண்டது
கதிமந்த மேயுடற் கதிர்ப்பைங் கேழினுக்
கெதிர்கண்ட பேரிலை யிம்மண் ணெங்குமே.

(இ - ள்.) அந்தக் கோம்பியின் பாதங்கள் ஒவ்வொன்றும் மூன்று பிரிவுகள் உள்ளவைகளாய் நெருங்காத மூன்று விரல்களை உடையன ; வால் மிகவும் நீளமானது ; கதி மந்தகதியே ; அதன் உடம்பின் பச்சை நிறத்துக்குச் சமானத்தைக் கண்டவர்கள் இந்தப் பூமியிலே எங்கும் இல்லை.

பதம் - பாதம் ; கவர் - பிரிவு ; மூவிரல் - மூன்று விரல்கள் ; ததைவு இன்றி - நெருக்கம் இல்லாமல் ; சால - மிக ; கதி - நடை ; உடல் கதிர்ப் பைங்கேழினுக்கு - உடலின் பிரகாசமான பச்சை நிறத்துக்கு ; எதிர் - எதிரான பொருள்.

சஙு. வாயுவை யுண்டது வாயங் காப்பொடு
தூயவெய் யவனிளஞ் சுடரிற் றோய்ந்திடு
நேயமொ டுடலினை நீட்டி யின்புறீஇ
மேயதின் றுதயத்தென் விழியி னோக்கினேன்.

(இ - ள்.) அது, இன்று உதயத்தில் காற்றைக் குடித்துக் கொண்டு, வாய்திறந்த வண்ணமாக உதய காலத்துச் சூரிய

னுடைய கிரணங்கள் தன்மேல் பட விரும்பி, உடம்பை நீட்டிக் கிடத்திக் கொண்டு படுத்திருந்தது. என் கண்ணாலே பார்த்தேன்.

வாயுவை உண்டு அது - அது காற்றைக் குடித்து; அங்காப்பு - திறப்பு; தூய - பரிசுத்தமான; வெய்யவன் - சூரியன் - இளஞ்சுடர் - இளவெயில்; தோய்ந்திடு - படிந்திடும்; நேயம்; விருப்பம்; இன்புறீஇ - இன்புற்று; மேயது - மேவியது; விழி - கண்.

[முதற் பிரயாணி "நேற்றுப் பார்த்தேன்" என்று சொல்லியதை மனத்தில் வைத்து இரண்டாம் பிரயாணி "இன்று உதயத்தில் பார்த்தேன்" என்றான். முன் இவர்கள், நடுப்பகலில் வழி நடந்தார்களென்றதனால், இப்போது பிற்பகல் என்பது விளங்கும்.]

சச. என்னலு முன்னவன் யானு முன்னைப்போல்
அன்னது கண்டுளே னதன்வண் ணம்முனஞ்
சொன்னவொண் ணீலமே துணிபொர் சோலையின்
மன்னிழ லிடையது வைக நோக்கினேன்.

(இ - ள்.) என்று இரண்டாம் பிரயாணி சொன்ன உடனே முதற் பிரயாணி கூறுகின்றான்:—நானும் உன்னைப்போலவே அதைப் பார்த்திருக்கிறேன். நான் முந்திச்சொல்லியபடி அதன் நிறம் நீலந்தான். இது நிச்சயம். அது ஒரு சோலையின் நிழலிலே இருந்தபோது பார்த்தேன்.

என்னலும் - என்று சொன்ன உடனே; அன்னது - அதை; கண்டுளேன் - பார்த்திருக்கிறேன்; வண்ணம் - நிறம்; வைக - தங்க.

சரு. என்றலும் பின்னவன் பச்சை யேயென
நன்றது பச்சையோ வென நகைத்தவன்
கன்றின னென்னைநீ யிரண்டு கண்களும்
இன்றிய குருடனென் றெணினை கொல்லென்றான்.

(இ - ள்.) என்று முதற் பிரயாணி சொன்னவுடன் இரண்டாம் பிரயாணி, அதன் நிறம் பச்சைதான் என்று வற்புறுத்திக் கூற, முந்தியவன், நல்லது பச்சையோ என்று கோபச் சிரிப்பாகச் சிரித்து, என்னை இரண்டு கண்களும் இல்லாத குருடன் என்று நினைத்தாயோ என்று கோபமாகக் கேட்டான்.

என்றலும் - என்று சொன்ன உடனே; பின்னவன்—இரண்டாம் பிரயாணி; நகைத்து - சிரித்து; அவன் - முதற்பிரயாணி; கன்றினன் - கோபித்தான்; இன்றிய - இல்லாத; எணினை கொல் - எண்ணினைகொல் - எண்ணினாயோ.

சசு. இப்படி யேயுன திரண்டு கண்களும்
எப்பொழு தும்முத விடுமென் றாலவை
அப்பிர யோசன மாகு மாகவே
செப்பிய படியிழந் தவைக டிண்ணமே.

(இ-ள்.) உன்னுடைய கண்களிரண்டும் எப்போதும் இவ்வாறாகவே உதவுமானால், அவைகள் பிரயோசனம் இல்லா தவைகளாம்: பிரயோசன மில்லாதவைகளாகவே, நீ சொல்லியபடியே இழக்கப்பட்டவைகள் என்பது நிச்சயம்.

அப்பிரயோசனம் ஆகும் - பிரயோசனம் இல்லாதவைகளாகும்; செப்பிய - சொல்லிய ; இழந்தவைகள் - இழக்கப்பட்டவைகள் ; திண்ணம் - நிச்சயம்.

சஎ. என்றுபின் னவனிசைத் தானிவ் வாறவர்
கன்றினர் கலாய்த்தனர் கலக மிஞ்சிட
அன்றுசொற் போர்கைப்போ ராகு செவ்வியிற்
சென்றனன் வேறொர்யாத் திரிக னுங்கரோ.

(இ - ள்.) என்று பிந்தியவன் மறுமொழி கூறினான். இவ்வாறாக இருவரும் சினங்கொண்டு கலகஞ்செய்தார்கள். அந்தக் கலகம் மிகுந்து வாய்ச்சண்டை கைச்சண்டையாகப் போகுஞ் சமயத்தில், மூன்றாம் பிரயாணி யொருவன் அந்தச் சோலை வழியே போனான்.

இசைத்தான் - சொன்னான்; கன்றினர் கலாய்த்தனர் - கோபித்துக் கலகஞ் செய்தார்கள்; அன்று* - அப்பொழுது; யாத்திரிகன் - பிரயாணி; ஆங்கு - அந்தச் சோலையில்; அரோ அசை.

சஅ. அன்னவன் தனையரு கழைத் திருத்தினர்
இன்னது நீலமோ பச்சையே கொலோ
பன்னுதி யறிதியேல் என்னப் பன்னுவான்
சொன்னவந் நிறங்களன் றுண்மை சொல்லுகேன்.

(இ - ள்.) அவர்கள், அவனை அழைத்துத் தம் பக்கத்திலே இருக்கும்படி செய்து, எங்கள் கலகத்துக்குக் காரணமாகிய இந்தச் செந்துவின் நிறம் நீலமோ பச்சையோ உனக்குத் தெரியு

---

[* அன்று என்பதற்கு அந்தத்தினம் என்பது சாதாரணமான பொருள். ஆயினும் சீவகசிந்தாமணி கனகமாலையாரிலம்பகம் 'மந்திரமூன்று' என்ற பாட்டின் உரையிலும் இலக்கணையாரிலம்பகம் 'எய்த்து நீர்' என்ற பாட்டின் உரையிலும் அன்று என்பதற்கு அப்பொழுது என்று பொருள் எழுதியிருப்பது காண்க.]

மானல் சொல்லென்று கேட்க, அவன், நீங்கள் சொல்லிய இரண்டு நிறமும் அன்று ; உண்மையைச் சொல்லுவேன் கேளுங்கள்.

பன்னுதி - சொல்வாயாக; அறிதியேல் - அறிவாயானல்.

சகூ. இத்தகு செந்துவை நேற்றி ராவிடை
நெய்த்தனி விளக்கொளி நேரி னேக்கினேன்
மைத்தகார் நிறத்ததே மறுத்தி ரேலிங்கென்
கைத்தல முளததது காட்டு கேனென்ருன்.

(இ - ள்.) இப்படிப்பட்ட செந்துவை நேற்று இராத்திரி விளக்கெதிரிலே பார்த்தேன். அதன் நிறம் கறுப்பு. என் வார்த்தையை நீங்கள் நம்பவில்லையானல், அது என் கைவசம் இருக்கிறது, காட்டுவேன் என்று சொன்னன்.

இத்தகு - இத்தன்மையுடைய; இரா இடை - இராத்திரியிலே; நெய்த்தனி விளக்கு - நெய்விட்டெரித்த ஒரு விளக்கு; மைத்த - கறுப்பு நிறமுடைய ; நிறத்தது - நிறத்தை உடையது; கைத்தலம் - கையினிடத்தில்; காட்டுகேன் - காட்டுவேன்.

ருo. காட்டுக நீலமன் றேலென் கண்ணினைத்
தோட்டொழி விப்பலென் றெருவன் சொற்றனன்
நாட்டிய பச்சையன் றென்னி னுனெனை
வீட்டுவ லென்றனன் வேறெரு ருத்தனே.

(இ - ள்.) என்று சொன்ன உடனே, அதன் நிறம் நீலமாக இராவிட்டால் என் கண்களைத் தோண்டித் தொலைத்து விடுவேனென்று முதற்பிரயாணி சொன்னன்; பச்சையாக இராவிட்டால் என் உயிரை யான் மாய்த்து விடுவேனென்று இரண்டாம் பிரயாணி கூறினன்.

காட்டுக - காட்டுவாயாக ; நீலம் அன்றேல் - நீலம் அல்லாமற் போனால்; தோட்டு - தோண்டி ; ஒழிவிப்பல்- தொலைத்து விடுவேன் ; சொற்றனன் - சொன்னான் ; நாட்டிய - (நான் சொல்லி) ஸ்தாபித்த ; வீட்டுவல் - மாய்த்துக்கொள்வேன்.

௯௧. இன்னணஞ் சபதமற் றிருவ ருஞ்சொல
அந்நிய னையமெல் லாம கன்றிட
முன்னுற வுய்ப்பனீர் முறையி னோக்கிய
பின்னது கரிதெனப் பேசு வீரன்றேல்.

௯௨. உண்ணுவ லதையிஃ துண்மை யென்றவர்
கண்ணெதிர் விடுக்கவே காமரூபியும்
வெண்ணிற மாயுற வெயர்த்து மூவருந்
துண்ணென விதிர்த்தனர் துணிந்து சொல்லுவார்.

(இ - ள்.) இவ்வாறாக, அவ்விருவரும் பிரதிக்கினைசெய்ய, மூன்றும் பிராணி, உங்கள் சந்தேகமெல்லாம் நீங்கிவிடும்படி அந்தப் பிராணியை உங்கள் எதிரே விடுவேன் ; அதை நீங்கள் பார்த்த பின்பு, நீங்களே அது கருமையானதென்று சொல்லுவீர்கள் ; நீங்கள் அவ்வாறு சொல்லாவிட்டால், நான் அதை உண்டு விடுகிறேன் என்று சொல்லி அதை அவர்கள் கண் முன்னே விட்டான். விடவே அது வெண்ணிறத்தோடு வெளிப்பட்டது. அதுகண்ட மூவரும் திடுக்கிட்டு நடுங்கினார்கள். கலக்கம் தெளிந்தபின்பு அவர்கள் ஆலோசித்துத் துணிந்து பின்வருவதைச் சொன்னார்கள்.

இங்ஙனம் - இப்படி ; அந்நியன் - மூன்றும் பிராணி ; ஐயம் எல்லாம் - சந்தேகம் முழுவதும் ; அகன்றிட - நீங்க ; முன் உய்ப்பேன் - எதிரே விடுவேன் ; முறையின் - ஒழுங்காக ; கரிது - கரியது ; அன்றேல் - அல்லவென்றால் ; உண்ணுவல் -

உண்பேன் ; காமரூபி - கோம்பி ; வெண்ணிறம் - வெள்ளை நிறம் ; வெயர்த்து - (பயத்தினால்) வேர்த்து ; துண்ணென - திடுக்கிட்டு ; விதிர்த்தனர் - நடுங்கினர்.

[பல சமயத்தில் பல நிறங்காட்டும் **கோம்பிக்குப் பச்சோந்தி** யென்பது சாதாரணமான பெயர். இந்நூலில் கோம்பியின் பல நிறங்கள் எடுத்துக் கூறப்படுவதனாலும், பச்சோந்தி யென்பது பச்சை நிறமுள்ள ஓந்தியென்று ஒரு நிறத்தையே குறிப்பதனாலும், இந்நூல் 'பச்சோந்தி விருத்தம் என்று பெயர் பெறுமல் 'கோம்பி விருத்தம்' என்னும் பெயர் பெற்றது.]

பச்சோந்தியைப் பற்றி இங்கே கூறப்பட்டவைகள் பொது மக்கள் கொள்கைகள். இக் கொள்கைகளுக்கும் பிராணி வருக்க நூலில் (Zoology) கூறப்பட்ட உண்மைகளுக்கும் சில வேற்றுமைகளுண்டு. விலங்கு நூலில் கூறப்படும் விவரம் வருமாறு :—

பச்சோந்தி யினத்தில் பலவகையுண்டு. இந்தச் செந்து சாதாரண ஓணனின் சாதியைச் சேர்ந்தது. இது சில சமயங்களில் தூங்குவது போலத் தோன்றும். அப்படித் தோன்றுவது, திடீரெனத் தனது மிக நீண்ட நாக்கை நீட்டி ஈ முதலிய சிறு செந்துக்களைப் பற்றி இரையாக உட்கொள்ளும். நாக்கு விசையாக வெளியே நீட்டப்படுதலும் உள்ளே யிழுக்கப்படுதலும் ஒரு குழலுக்குள் அடைக்கப்பட்டுள்ள திருகுவில் (Spiral spring) வெளிக்குதிக்க விடப்படுதலும் உள்ளே இழுத்துக் கொள்ளப் படுதலும் போலும். நாக்கின் நீளம் வால் தவிர்த்த உடல் நீள அளவிருக்கும். வால் வயிற்றுப்புறம் நோக்கி வளைந்து சுருள்வதாய் மரக் கொம்புகளைச் சுற்றிப் பற்றுதற்கேற்றது. கால்கள் ஒவ்வொன்றும் ஐந்து விரல்கள் உள்ளவை. அவைகளும் கொம்புகளைப் பற்றுதற்கு நன்கு உதவுபவை. முன்னங்கால் விரல்களில் இரண்டு வெளிப்புறமும் மூன்று உட்புறமும் உள்ளன. இதற்கு நேர்மாறுகப் பின்னங்கால்களில் மூன்று விரல்

கள் வெளியேயும் இரண்டு விரல்கள் உள்ளேயும் இருக்கின்றன. வெளிப்பக்கத்து விரல்களும் உட்பக்கத்து விரல்களும் எதிரெதிராக மடங்கி மரக் கொம்பைப் பற்றிக்கொள்வதற்கு வாய்ப்பாயுள்ளன.

பச்சோந்தி இருபத்துநான்கு மணி நேரத்தில் ஆறுவகை நிறங்கள் தோற்றுவிப்பதைக் காணலாம். நிற மாற்றத்துக்கு அகத்தே நிகழும் கோபம் பயம் முதலியனவும் புறத்தே நிகழும் இரவு பகல் முதலியனவும் காரணமாம். நிறம், இரவில் வெளிறின மஞ்சள் வருணமாயும் (Cream Coloured), பகலில் ஒருவகைப் பச்சை (Grey green) வருணமாயும் இருக்கும். பகல் நிறத்திலும் இரா நிறத்திலும் இரண்டிலும் இடையிடையே வெவ்வேறு துண்டு துண்டான பல கலப்பு வருணங்களும் காணப்படும்.

இந்தப் பிராணி நிறமாற்றமேயன்றி உடல் மாற்றமும் செய்யவல்லது. சில சமயங்களில் உடலை உப்பிப் பெரிதாகவும் ஒடுக்கிச் சிறிதாகவும் காட்டும். பாம்பு சீறி யிரைதல் போல இரைந்து கோபமாக இருபக்கமும் மாறி மாறிச் சாய்ந்தசைதலும் செய்யும்.

௩௫. எப்பொருளெவரெவ ரிடத்துக் கேட்பினும்
அப்பொருள் மெய்ப்பொரு ளறிதன் மெய்யறி
விப்புவி தனிலென வெண்ணி டாதியாம்
தப்புறு கலாஞ்செய்து தாழ்வை யுற்றனம்.

(இ - ள்.) "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் - மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்ற திருவள்ளுவர் வாக்கியத்தை எண்ணிப் பாராததனால், துன்பு மிகுந்த இந்தக் கலகத்தை நாம் செய்யும்படி நேர்ந்தது.

கேட்பினும் - கேட்டாலும் ; கலாம் - கலகம்.

ருசு. தலைகண்டார் மீனெனச் சாற்ற வால்கண்டா
ரிலைகண்டே மரவமே யென விரண்டுமாய்
அலதுந்தா னுமலங் கனவி தன்முழு
நிலைகண்டே மிலைபல நிகழ்த்தி னேமரோ.

(இ - ள்.) தலையைப் பார்த்தவர்கள் மீனென்று சொல்ல, வாலைப் பார்த்தவர்கள், பார்த்தது மீன் அன்று, பாம்பே என்று சொல்ல, மீனின் தலையுடைமையால் மீனும் பாம்பின் வாலுடைமையால் பாம்பும் ஆக இரண்டுமாகி, முழுவதும் பாம்பாகவாவது மீனாகவாவது இலலாததனால் இரண்டும் அல்லாததும் ஆகும் மலங்கு என்ற செந்துவை மயக்கஞ் செய்யுந் தன்மையில் இந்தக் கோம்பி'ஒக்கும். இதன் நிலைமையைப் பூரணமாக அறியாமல் பலவற்றைப் பேசினோம்.

சாற்ற - சொல்ல ; இலை - இல்லை ; அரவம் - பாம்பு ; என - என்ன - என்றுசொல்ல; மலங்கு - மீனின் தலைபோலும் தலையும் பாம்பின் வால் போலும் வாலும் உடைய நீர்வாழும் செந்து ; நிகழ்த்தினேம் பல - பலவற்றைப் பேசினோம்.

ருரு. ஒருமுக மேயொர்திக் குற்று நோக்கிடின்
எருதின தெதிர்த்திசை யெய்திக் கண்ணுறிற்
கரியின தாகச்சித் திரத்திற் கானுருப்
பொருமிதன் புதுமையார் புகல வல்லரே.

(இ - ள்.) ஒரு முகமே ஒரு பக்கத்திலிருந்து பார்த்தால் எருதின் முகமாகவும் அப்பக்கத்துக்கு எதிர்ப்பக்கத்திலிருந்து பார்த்தால் யானையின் முகமாகவும் தோன்றும்படி சித்திரத்தில் எழுதப்பட்டுள்ள உருவை இது ஒக்கும். இதன் புதுமையைச் சொல்ல வல்லவர்கள் யாரிருக்கிறார்கள்.

ஒர்திக்கு - ஒரு திக்கு ; நோக்கிடில் - பார்த்தால் ; எருதினது - எருதினுடைய முகம் ; எய்தி - அடைந்து ; கண்ணுறில் -

பார்த்தால் ; கரியினது - யானையினுடைய முகம் ; காண் உரு - காணப்படுகின்ற உருவம் ; பொரும் - ஒக்கும் ; புகல - சொல்ல ; வல்லர் - வல்லவர்.

[ஒக்கும் என்பதன்முன் 'மயக்கஞ் செய்யுந் தன்மையில்' என்று இதற்கு முந்திய பாட்டின் உரையில் வருவித்தது போலவே இந்தப் பாட்டுரையிலும் இனி வரும். ௫௬ முதல் ௬௪ இறுதியாக உள்ள பாட்டுக்களின் உரையிலும் வருவித்துக் கொள்க.]

௫௬. சீலமார் பசியமெய்ச் சிலையி ராமனுங்
கோலமார் கார்வணங் கொண்ட கண்ணனும்
பாலவா நிறத்தலா யுதனும் பாரிலாம்
நீலமா றன்னையின் னது நிகர்க்குமே.

(இ - ள்.) பச்சை நிறமுடைய இராமனும், கரிய நிற முடைய கிருஷ்ணனும், வெண்ணிறமுடைய பலபத்திர ராமனும் ஆகப் பூமியில் அவதாரம் செய்த நீலநிறமுடைய திருமாலையும் இது ஒக்கும்.

சீலம் - நல்லொழுக்கம் ; ஆர் - நிறைந்த ; பசிய - பச்சை நிறம் உள்ள ; மெய் - தேகத்தை உடைய ; சிலை - வில்லை உடைய ; கோலம் ஆர் - அழகு நிறைந்த ; கார்வணம் - கறுத்த நிறம் ; கண்ணன் - கிருஷ்ணன் ; பால் அவாம் நிறத்து - பாலும் அவாவும் (- விரும்பும்) நிறத்தையுடைய - பாலினும் மிக்க வெண்மையான நிறத்தை உடைய ; அலாயுதனும் - அலத்தை (- கலப்பையை) ஆயுதமாக உடைய பலபத்திர ராமனும் (ஆக); பாரில் ஆம் - பூமியில் ஆகிய (- அவதரித்த); நீலமால் - நீல நிறமுள்ள விஷ்ணு.

௫௭. பாரிலார் கலிநதி பட்ட மாதியிற்
சேருநீ ராவியாய்த் திரிந்து மேகமாய்
மாரியா யாலியாய் மற்றும் பல்லுரு
ஆருமா லதனையு மன்ன தின்னதே.

(இ - ள்.) கடல் ஆறு குளம் முதலியவைகளிலுள்ள நீர், சூரிய வெப்பத்தால் நீராவியாகிப் பின்பு மேகமாகி மேகத்திலிருந்து மழையாகவும் ஆலாங்கட்டியாகவும் விழுந்து இவைகளே யன்றி மூடுபனி முதலிய வேறு பல உருவங்களாகவும் மாறுகின்றது. அப்படிப்பட்ட நீரையும் இது ஒக்கும்.

பாரில் ஆர்கலி - பூமியிலே உள்ள கடல் ; பட்டம் - குளம் ; ஆலி - ஆலாங்கட்டி ; (ஆலாங்கட்டி விழுதலைக் கல்மழை பெய்கிறதென்று சொல்வதுண்டு.) ஆரும் - பொருந்தும் ; ஆல் - அசை ; அன்னது - ஒத்தது ; இன்னது - இது.

௫௮. தோடுறு முட்டையாத் தோன்றிப் பின்றவழ்
கீடம தாகிமுன் கெழீஇய வண்டநேர்
கூடுசெய் துறைந்துநீங் குபு பறந்துலாஞ்
சேடுறு பட்டுப்பூச் சியையும் போலுமே.

(இ - ள்.) பட்டுப்பூச்சி, முதலில் முட்டையாக இருந்து பொரிக்கப்பட்டுப் புழுவாகி அந்த வடிவத்துடன் சில நாள் வளர்ந்து பின்பு முட்டை வடிவமான கூடுகட்டி அதன் உள்ளே சிலநாள் இருந்து பூரண வளர்ச்சி அடைந்த உடனே அந்தக் கூட்டைத் துளைத்துப் புறப்பட்டு வெளியே பறந்து உலாவும். அப்படிப்பட்ட பட்டுப் பூச்சியையும் இது ஒக்கும்.

தோடு - முட்டையின் ஓடு ; கீடம் - புழு ; கெழீஇய - பொருந்திய ; அண்டம் - முட்டை ; நீங்குபு - நீங்கி ; உலாம் - உலாவும் ; சேடு - அழகு.

[பட்டுப்பூச்சி, முட்டைப் பருவம் முடிந்து புழுவாகி வளர்ந்து, புழுப்பருவமும் பூரணமான உடனே தன் உடம்பில் உள்ள ஒருவகைச் சத்தினால் பட்டுநூல் இழைத்து, இந்த நூலினால் தன் உடம்பைச் சூழக் கூடுசெய்து, காற்று வெயில் மழை பனி இவைகளால் பாதிக்கப்படாமல் அந்தக் கூட்டினுள்ளே சிலநாள் ஆகாரமின்றி இருந்து வளர்ந்து, கூட்டுள் வளரும் பருவம் முற்றுப்பெற்ற உடனே தன் உடம்பில் ஊறும் ஒருவகை நீரினால் அந்தக் கூட்டை நனைத்து ஊறச்செய்து, ஊறிய பாகத்தை எளிதாகத் துளைத்து, வெளியே பறந்து உலாவுகின்றது. இப்படிப் பறக்கும் பூச்சிப் பருவத்திலே தான், பட்டுப்பூச்சிகள் ஆணும் பெண்ணும் சேர்கின்றன; சேர்ந்த பின் ஆண் பூச்சி இறந்து விடுகின்றது. பெண் பூச்சியும் முட்டை யிட்டபின் இறந்து விடுகின்றது. பட்டுப்பூச்சி, புழுவாயிருந்த காலத்தில் தன் உடம்பில் சேமித்து வைத்திருந்த ஆகாரச் சத்தே அது கூட்டுள் வளரும் காலத்தில் உபயோகப்படுகின்றது. இவ்வாறே பெரிய பிராணிகளில், பூமியின் வடக்கு முடிவாகிய துருவப் பிரதேசத்தில்[1] வாழும் வெண்ணிறமுடைய துருவக்கரடிகள்[2], வெப்பமுள்ள சில மாதங்களில் சேமித்து வைக்கும் ஆகாரச் சத்தினால், கொடுங்குளிர் மிகுந்து எங்கும் உறைபனி மூடிக் கவர்ந்துகொள்ளும் வேறு சில மாதங்களில் எவ்வகை ஆகாரமும் முயற்சியும் இல்லாமல் இரவும் பகலும் இடைவிடாது தூங்குகின்றவைபோ லிருக்கின்றன. இவைகள் ஆகாராதிகளை நிவிர்த்திசெய்து நெடுங்காலம் யோகத்திலிருக்கும் யோகிகளைப்பற்றி ஞாபக மூட்டுகின்றன.]

ருகூ. உரிமையோ டவரவ ருள்ளத் துள்ளுபு
தெரியுமா மலரெஃ தவ்வத் தேமலர்
தருநல்வா சனையவர் தமக்குத் தந்திடு
மொருமனோ ரஞ்சித மலரு மொக்குமே.

---

1 Polar region. 2 Polar bears.

(இ - ள்.) ஒரே மனோரஞ்சிதப் பூவானது, யார் யார் எந்த எந்தப் பூவை உத்தேசித்துக் கொள்ளுகிறார்களோ, அந்த அந்தப் பூவின் வாசனையை அவரவர்களுக்குக் கொடுக்கின்றது. அப்படிப்பட்ட பூவையும் இது ஒக்கும்.

உரிமையின் - சுதந்தரமாக; உள்ளம் - மனம்; உள்ளுபு - சிந்தித்து; தெரிமலர் - ஆராய்ந்து தெரிந்தெடுத்த பூ; அவ்வத்தேமலர் - அந்த அந்தத் தேனையுடைய பூ.

௯௰. எவ்வெவ பறவையெவ் வெவணங் கூவிடும்
அவ்வவண் ணஞ்செவ்வி தவிந யித்துக்கூய்த்
தெவ்வுபுள் வலைஞருந் திகைப்பச் செய்திடு
மொவ்வலில் விகடப்புள் ளும்பொ ரூஉமரோ.

(இ - ள்.) **விகடப்பறவை** என்ற பக்ஷியானது, எந்த எந்தப் பறவை எப்படி எப்படிக் கூவுமோ, அப்படி அப்படியே கூவி, பக்ஷிகளைப் பிடித்தலே தொழிலாக உடைய வேடரும் திகைக்கும்படி செய்யும். அந்தப் பறவையையும் இது ஒக்கும்.

**எவ்வெவ** என்பதில் இறுதியில் உள்ள அ சாரியை; அவ் அவ் வண்ணம் - அந்த அந்த மாதிரி; செவ்விது - நன்றாக; கூய் - கூவி; தெவ்வுதல் - கைக்கொள்ளல்; புள்வலைஞர் - பக்ஷி பிடிக்கும் வலையை உடைய வேடர்; ஒவ்வல் இல் - (ஒன்றும்) சமமாகுதல் இல்லாத ; விகடப்புள் - (மற்றைப் பறவைகள் போலக் கூவி) விகடம் செய்கின்ற ஒருவகைப் பறவை; பொரூஉம் - ஒக்கும்.

[**விகடப்பறவை** * என்பது **அமரிக்கா** தேசத்து வனங்களில் வாழும் ஒருவகைப் பறவை. இது எந்தப் பறவையைப் போலவும் கூவவல்லது. இது பல பறவைகள் போலக் கூவும் போது, பாராமல் தூரத்தே நின்று கேட்போர், பல பறவைகள்

* Mocking-bird.

கூடிக் கூவுகின்றனவென்று நினைப்பார்கள். இந்த ஆச்சரிய கரமான சத்தியையுடைய இந்தப் பறவை மிகுந்த குறும்புக் குணமும் உள்ளது; வல்லூறு போலக் கூவி மற்றைப் பறவைகள் அஞ்சி ஒளிக்கச்செய்தும், அந்த அந்தச் சாதி ஆண் பறவை போலக் கூவி அவற்றின் பெடைகளைக் கூட்டினின்று வெளியே வரச்செய்தும் விளையாடும்.]

௬௧. பிரிபவர் தமக்கழல் பிரிந்து மீளவும்
வருபவர் தமக்கழ லாக்கி வந்தவொவ்
வொருவருந் தங்கட்கே யுரிய ரென்றெணப்
புரிபவ ரெனும்பரத் தையரும் போலுமே.

(இ - ள்.) வேசையர் தம்மிடம் வந்து சேர்ந்திருந்த புருஷர் பிரியும்போது அவர்கள் பிரிவதைச் சகியாதவர்போல அழுவார். அப்புருடர் பிரிந்துபோன தற்சமயத்தில் முன் பிரிந்துபோயிருந்த வேறு புருடர் வந்து அழுகைக்கு காரணம் யாது என்று கேட்பார்க்கு உம்முடைய பிரிவே என்று சொல்லிப் 'போவார்க் கழுத கண் ணீர் வருவார்க்கும் பொருந்தியதே' ஆகச் செய்வார். இவ்வாறாக அவர்கள் தம்மிடத்து வரும் ஒவ்வொரு புருஷரும் அவர்களைத் தங்கள் தங்களுக்கு மாத்திரம் உரிமைப்பட்டவர்கள் என்று நம்பும்படி செய்வார்கள். இப்படிக் கூறப்பட்ட வேசையரையும் இது ஒக்கும்.

மீளவும் - திரும்பவும்; புரிபவர் - செய்பவர்; பரத்தையர் - வேசையர்.

௬௨. புருடர்கள் வலியவே பொருணல் கக்கொளவ்
எரியிழை வேசைய ரென்ன வீதெழில்
அருகலின் மயிலின மருகணைந்துதம்
இருகணுந் தரக்கொண்டுண் டிடுமென் பார்முனோர்.

(இ - ள்.) புருஷர்கள் தமது கையிலுள்ள பொருளை வலியக் கொடுக்கப் பெற்றுக்கொள்ளும் அந்த வேசையர்போல, இதுவும் மயில்கள் தாமாகப் பக்கத்திலேவந்து கண்ணை வலியக் கொடுக்கக் கொண்டு உண்ணும் என்று முன்னோர் சொல்வார்கள்.

வலியவே - தாமகாவே; நல்க - கொடுக்க; எரி இழை - பிரகாசிக்கின்ற ஆபரணம்; ஈது - இது - இந்தக் கோம்பி; எழில் - அழகு; அருகல் இல் - குறைதல் இல்லாத; மயில் இனம் - மயிலின் கூட்டம்.

சஈ. வெயிலதா மொளியொன்றே விளங்கு பன்னிற
வியனுறாஉ மாடிகள் மேய்வெவ் வேறொளி
பயிலல்போ லிஃதுதான் சார்ந்த பல்பொரு
ளியலினோ டியைபல நிற மியைந்ததே.

(இ - ள்.) வெயில் என்ற சூரிய கிரணமாகிய வெள்ளை நிறமுள்ள ஓர் ஒளிதானே, பல வெவ்வேறு நிறமுடைய கண்ணாடிகளைச் சார்ந்து பல வெவ்வேறு நிறமான ஒளியாகத் தோன்றுகின்றதன்றோ; அது போலவே, இதுவும் தான் சார்ந்த பொருள்களின் தன்மைகளுக்குத் தக்கபடி பல நிறங்களை அடைந்தது.

பல்நிறவியன் உறாஉம் - பலவகைப்பட்ட நிற வேறுபாடுகளைப் பொருந்திய; வியன், மிகுதியுமாம்; ஆடி - கண்ணாடி; மேய் - மேவி - பொருந்தி; பயிலல் - பழகுதல் - கூடுதல்; சார்ந்த - சேர்ந்த; இயல் - தன்மை; இயை - இசைவான; இயைந்தது - பொருந்தியது.

சச. இளவெயில் பொழினிழ லெரி விளக்கினில்
தெளிவொடவ் வவர்கண்ட நிறத்தைச் செப்பினேம்
மிளிர்பகல் வெயிலிடை வெள்ளி தாமிது
கொளுநிறம் பலவெனக் குறித்தி லேமரோ.

(இ - ள்.) இது, நம்முள் முதற்பிரயாணி சோலையின் நிழலிலே இருக்கப் பார்த்த போது நீலமாக இருந்தது ; இரண்டாம் பிரயாணி, சூரியோதய காலத்திலே இளவெயில் காய்ந்து கொண்டிருக்கப் பார்த்தபோது பச்சையாக இருந்தது ; மூன்றும் பிரயாணி விளக்கு வெளிச்சத்திலே பார்க்கக் கறுப்பாக இருந்தது. அப்படியே நாம் ஒவ்வொருவரும் அவரவர் கண்ட நிறத்தைச் சொன்னோம். இப்போது முதிர்ந்த வெயிலிலே நாம் மூவரும் பார்க்க வெள்ளையாக இருக்கிற இது, பல சமயத்தில் பலநிறம் கொள்ளுமென்பதை நாம் தெரியவில்லை.

பொழில் - சோலை ; மிளிர் - பிரகாசிக்கின்ற ; வெள்ளிதாம் - வெண்மையாகும் : கொளும் - கொள்ளும்.

சுஙி. யாவரும் வழுவிலம் யாவ ரும்வழு
மேவின மினிக்கண்ட விளம்பு வேமெனில்
ஏவரு நம்மைப்போற் பார்ப்ப ரென்பதை
ஓவற நெஞ்சினு ளுறுத்தல் வேண்டுமால்.

(இ - ள்.) இதனிடத்தில் அவரவர் கண்ட நிறத்தைச் சொல்லியதனால் நாமெல்லாரும் குற்றமில்லாதவர்களாக இருக்கிறோம். இது, அவரவர் காணாத வேறு நிறமும் அடையுமென்று தெரியாததனால், குற்றம் உடையவர்களாகவும் இருக்கிறோம். இனிமேல் நாம் கண்டவற்றைச் சொல்லுவோமானால், மற்றவர்களும் நம்மைப்போலவே பார்ப்பார்களென்றதை நம்முடைய நெஞ்சில் அகலாது பதித்து வைக்கவேண்டும்.

வழு இலம் - குற்றம் இல்லோம் ; கண்ட - கண்டவைகளை ; ஏவரும் - யாவரும் ; ஓவற - நீக்கம் இல்லாமல் ; உறுத்தல் - உறச் செய்தல்.

சுசு. நம்முடைக் கண்ணினு நம்பத் தக்கன
தம்முடைக் கண்ணெனப் பிறர்க டாமுறல்
இம்மியத் தனேவியப் பிலேநங் கண்ணினு
மெய்ம்மையிற் பிறர்கணே நம்பு வேங்கொலோ.

(இ - ள்.) மற்றவர்கள் நம்முடைய கண்ணைக் காட்டிலும் தங்கள் கண்ணை நம்புவது எள்ளளவும் ஆச்சரியமானதன்று. உண்மையாக, நம்முடைய கண்ணிலும் மற்றவர்கள் கண்ணை நாம் நம்புவோமோ?

நம்முடைக்கண் - நம்முடையகண்; தம்முடைக்கண் - தம்முடையகண்; பிறர்கணே - மற்றவர்கள் கண்ணை.

சுஎ. ஒருபுறம் வெள்ளியோர் புறத்தொண் பொன்பொதி
தருபரி சையினெவ்வொர் பக்கந் தாந்தெரிந்
தரியவஃ திரசத மம்பொ னென்றுவாள்
உருவிமுன் பொருமிரு வோரை யொத்தனம்.

(இ - ள்.) ஒரு கேடகம், ஒரு புறம் வெள்ளித் தகட்டினு லும் மற்றொரு புறம் தங்கத் தகட்டினுலும் பொதியப் பட்டிருந் தது. அப்பக்கங்களில் ஒவ்வொன்றை மாத்திரம் பார்த்த இரண்டு வீரர்கள் அதை வெள்ளியென்றும் தங்கமென்றும் தான் தான் பார்த்ததையே வற்புறுத்திக்கூறித் தம்முள் மாறு பட்டு வாளுருவிப் போர் செய்தார்களென்று கேட்டிருக்கின்ருே மன்ருே; அந்த வீரர்களை நாம், மயங்குந் தன்மையில், ஒத்தோம்.

பொதிதரு பரிசையின் - பொதியப்பட்ட கேடகத்தினுடைய; ஒவ்வொர் - ஒவ்வொரு; இரசதம் - வெள்ளி; பொரும் - போர் செய்த.

[ஒரு வனத்திலே இருபக்கமும் மரங்கள் அடர்ந்த ஒரு பாதையிலே ஒரு நாள் உதய காலத்திலே இரண்டு வீரர்கள் எதிரெதிரான திசைகளை நோக்கிப் பிரயாணஞ் செய்து கொண் டிருந்தார்கள். அந்தப் பாதையூடு குறுக்காக ஓடிய ஒரு மரக்

கிளையிலே ஒரு கேடகம் தூக்கப்பட்டிருந்தது. அதனருகே மேற்கூறிய இரண்டு வீரர்களும் சந்தித்து ஒருவனை யொருவன் வந்தனோபசார வார்த்தைகள் வழங்கி வரவேற்றபின் ஒருவன் மற்றொருவனை நோக்கி "இந்தப் பொற் கேடகம் எதற்காக இங்கே தூக்கப்பட்டிருக்கின்றது, சொல்வாயாக" என்று கேட்டான். அதற்கு அவன் "இது வெள்ளிக் கேடகமாயிற்றே: நீ என் தவருகப் பொற்கேடகமென்று சொன்னாய்" என்றான். அதைக்கேட்டு முன்னவன் "நீ தங்கத்தை வெள்ளியென்று மயங்குவதனால், உன் பார்வை மிகவும் கூர்மையற்றதாக இருக்க வேண்டும்" என்று கூற, பின்னவன் "என் பார்வை, வெள்ளியைத் தங்கமென்று மயங்கும் உன் பார்வை போலக் கூர்மையற்றதன்று" என்றான்.

இவ்வாறு இருவருக்கும் நேர்ந்த விவாதம் முதிர்ந்து இறுதியில் "நீ பொய்யன், நீ பொய்யன்" என்ற வார்த்தைகள் வசமிழந்த இருவர் வாயினின்றும் ஏக காலத்தில் வெளிப்படவே, இருவரும் கடுங் கோபங்கொண்டு ஒருவன்மே லொருவன் பாய்ந்து புலியோடு புலியும் யானையோடு யானையும் சிங்கத்தோடு சிங்கமும் எதிர்த்தாற்போல ஏற்றந் தாழ்வில்லாமல் நெடுநேரம் போர் செய்து இளைத்துச் சற்றுச் சிரம பரிகாரம் செய்துகொண்டு திரும்பப் போர் தொடங்கினார்கள்.

அந்தச் சமயத்திலே அந்த யுத்த கோஷத்தைக்கேட்டு அங்கு ஒரு சந்நியாசி வந்து இருவரையும் நோக்கி "நில்லுங்கள், நீங்கள் எதற்காகச் சண்டை செய்கிறீர்கள், சொல்லுங்கள்" என்று கேட்டார். உடனே ஒருவன் "இந்தப் பொய்யன், அதோ தொங்கும் கேடகத்தைப் பொற்கேடகமென்று வற்புறுத்துகின்றான்" என்றான். மற்றவன் "இந்தப் புரட்டன், அதை வெள்ளிக் கேடகமென்று சாதிக்கின்றான்" என்றான். இருவர் வார்த்தையுங் கேட்ட சந்நியாசி, குறுஞ்சிரிப்புக் கொண்டு சண்டையை நிறுத்தி "முன் ஒருவன் நின்று பார்த்த திசையில் மற்றொருவன்போய் நின்று அந்தக்கேடகத்தைப் பாருங்கள்" என்றார். அவ்வாறே இருவரும் செய்ய, இருவர்

பிழைகளும் வெளியாயின. உடனே அவர்கள் சந்நியாசிக்கு நன்றி கூறி ஒருவனை யொருவன் மன்னிப்புக்கேட்டு நண்பராயினார்கள்.

கூஅ. தயங்கொரு நதியினைத் தாண்டித் தம்மைவிட்
டுயங்குபு பிறரையொவ் வொருவ ரும்மெணித்
தியங்கியஃ தொருவனைச் செகுத்த தென்றுமுன்
மயங்கிய நாலறு வரையும் போன்றனம்.

(இ-ள்.) இருபத்து நான்கு பேர் சேர்ந்த ஒரு கூட்டத்தார் ஒருநாள் ஒரு நதியைக் கடந்து போனார்கள். கடந்தவர்கள் அந்த நதி கொடியதென்று சொல்லக் கேட்டிருந்ததனால், அவர்களுடைய தொகை சரியாக இருக்கிறதோ வென்று பார்க்க, அவர்களுள் ஒவ்வொருவரும் தம்மை விட்டுவிட்டு மற்றவர்களை எண்ணிப்பார்க்க, ஒரு எண்ணம் குறையக்கண்டு திகைத்து அந்தக் கொடிய நதி ஒருவனைக் கொன்று விட்டதென்று (வழிப்போக்கன் ஒருவன் வந்து அவர்கள் பிசகைத் தெரிவிக்கும் வரை) மயங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களையும் நாம் மயங்குந் தன்மையில் ஒத்தோம்.

தயங்கும் - பிரகாசிக்கும்; உயங்குபு - வாடி; எணி - எண்ணி; அஃது - அந்த ஆறு; செகுத்தது - கொன்றது; நாலறுவர் - இருபத்துநான்கு பேர்.

கூகூ. தீதுறாஉ மிருளினோர் தெலுங்கன் செங்கையார்
காதுறாஉந் தோட்டியோர் தமிழன் காதுற
'நாதிகா' தெனப்பல்கா னவின் றுடன்றுமன்
பேதுறாஉ மவ்விரு பேரும் போன்றனம்.

(இ-ள்.) ஒரு நாள் மிகுந்த இருட்டு வேளையிலே ஒரு தெலுங்கன் கையிலிருந்த தோட்டி ஒரு தமிழன் காதில் மாட்டிக் கொள்ள, அதைத் தமிழன் விடுவிக்கும்படி பிடித்திழுத்தான். உடனே தெலுங்கன் தன் தோட்டியைத் தமிழன் பிடுங்

ஙிக் கொள்ள உத்தேசிக்கிருனென்று எண்ணி 'நாதி' (என்னுடையது) என்று சொல்லிக் கொண்டு அந்தத் தோட்டியைத் தானும் இழுத்தான். அதனல் தமிழன் காதில் வேதனை உண்டாக, அவன் 'காது' என்று சொல்லி அந்தத் தோட்டியை விடாமல் இழுத்தான். தெலுங்கன் தான் 'நாதி' (என்னுடையது) என்றதற்கு எதிரிடையாகத் தமிழன் 'காது' (அல்ல) என்று சொல்லியதாகப் பாவித்து 'நாதி என்று திரும்பவும் சொல்ல, அதன் அர்த்தத்தைத் தமிழன் அறியாமல் 'காது' என்று மறுபடி சொல்ல, இவ்வாறு 'நாதி, காது' என்று இருவரும் பலமுறை சொல்லி, (இரண்டு பாஷையுந் தெரிந்த ஒருவன் இருவர் பிசகையும் தெரிவிக்கும் வரை) மயங்கினர்கள் என்று கேட்டிருக்கின்ருேமன்ருே; அவ்விருவரையும் நாம் மயங்குந் தன்மையில் ஒத்தோம்.

தீதுறூஉம் இருள் - (களவு முதலிய தீய செய்கைகள் எளிதாகச் செய்ய இடங்கொடுப்பதாகிய) தீங்கு மிகுந்த இருட்டு; செங்கை ஆர் - சிவந்த கையில் தங்கிய; காதுறூஉம் தோட்டி - வருத்தஞ் செய்யும் தோட்டி; 'நாதி' என்னுடையது என்ற அர்த்தம் உடைய ஒரு தெலுங்கு வார்த்தை; காது என்ற சப்தத்துக்குத் தெலுங்கில் அல்ல என்பது பொருள்; மன்பேதுறூஉம் - மிக மயங்கிய; போன்றனம் - ஒத்தோம்.

௭௦. பலபல வுறுப்பையுந் தொட்டுப் பார்த்துத்தாம்
மலேவற வவரவர் மனங்கொ ளங்கநேர்
அலகுரல் சுளகுலக் கையொப் பானேயென்
றுலேவுறு பிறவியந் தகரு மொத்தனம்.

(இ - ள்.) சில பிறவிக் குருடருக்கு ஒரு யானைப்பாகன் அதன் பல உறுப்புக்களேயும் அவர்கள் கையைப் பிடித்துத் தடவச் செய்து காட்டினன். பின்பு, அவர்களுள் வாலேத் தடவிப் பார்த்தவன் யானே விளக்குமாறுபோ விருக்கிறதென்ருன்; காலேத் தடவிப் பார்த்தவன் உரல்போலிருக்கிறதென்ருன்;

காதைத் தடவிப் பார்த்தவன் முறம்போலிருக்கிறதென்ருன்; துதிக்கையைத் தடவிப் பார்த்தவன் உலக்கைபோ லிருக்கிற தென்ருன். இவ்வாருக, அந்தப் பிறவிக் குருடர்கள் உண்மை யறியாமல் மயங்கிஞர்கள். அவர்களேயும் நாம் ஒத்தோம்.

அங்கம் - உறுப்பு ; நேர் - ஒத்த ; அலகு - விளக்குமாறு ; சுளகு - முறம் ; உலேவுறு - வருத்தம் அடைந்த.

எக. பரம்பொரு ளொன்றையே பற்றிப் பேசுறும்
தரந்தர மானபல் சமயத் தர்க்கர்தாந்
தெரிந்தது தானுண்மை யென்பர் செப்பெலாம்
பொருந்துமஃ தென்றெணு ரவரும் போன்றனம்.

(இ - ள்.) தெய்வம் ஒன்றையேபற்றி விவகரிக்கும் பல சமயவாதிகளும் அவரவர்கள் தெரிந்ததுமட்டும் உண்மை யென்று சொல்வார்கள் ; அந்த ஏக வஸ்து அவர்கள் எல்லாரும் சொல்லும் எல்லாவற்றையும் பொருந்தியுள்ளதென்று தெரியார் கள். அவர்களேயும் நாம் ஒத்தோம்.

தரந்தரமான - பல வகையான ; செப்பு எல்லாம் - சொல் லும் எல்லாவற்றையும் ;

எஉ. பொய்யென்று தோன்றிடப் புகன்ற யாவினும்
மெய்யொன்று மிலாதிரா தென்னு மேலவர்
ஐயொன்று மொழியத னரிய வான்பொருள்
கையொன்று நெல்லியங் கனியிற் கண்டனம்.

(இ - ள்.) பொய்யென்று தோன்றும்படியாகச் சொல்லப் பட்ட ஒவ்வொரு பிரஸ்தாபத்தையும் நன்ருக விசாரித்தால், அதனதன் அடிப்படையாகச் சிறிதாயினும் உண்மை யிருப்பது வெளிப்படும் என்று பெரியோர் சொல்வதன் சிறந்த கருத்து இன்று உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளங்கியது.

மெய் ஒன்றும் - மெய் சிறிதாயினும் ; இலாதிராது - இருக்கவே செய்யும் ; ஐ ஒன்று - அழகுபொருந்திய ; கை ஒன்று - கையிலே பொருந்திய ; கனியில் கண்டனம் - கனியைப் போலப் பார்த்தோம்.

எ௩. ஒருபொருட் குப்பல பக்க முண்டன்றி
மருவுமற் றஃதிடங் கால மாறலால்
திரிதலுற் றிடுமிது தேர்ந்தி டார்கடாம்
சரியெனக் கண்டதே சாதிப் பாரரோ.

(இ - ள்.) ஒரு பொருளுக்குப் பல பக்கங்கள் உண்டு; அன்றியும் அது காலபேதம்தேசபேதம் முதலிய பேதங்களினுல் மாறுதல் அடையும். இந்த உண்மையை அறியாதவர்களே தாங்கள் கண்டது மாத்திரம் சரியென்று சாதிப்பார்கள்.

மருவு - பொருந்திய ; திரிவு - மாறுபாடு.

எச. எனவியல் பாகச்சந் தித்த மூவர்முற்
றனுபவ வறிவினு லறைந்த உண்மையை
யுனுபவர் பிறருரை யெவற்றி னுள்ளினு
மனுமுண்மை யறிந்திட வல்ல ராவரே.

(இ - ள்.) என்று தற்செயலாகச் சந்தித்த மூன்று பிராணிகளும் பூரணமான அனுபவத்தோடு கூடிய அறிவின் உதவியினுல் சொல்லிய உண்மையைச் சிந்திப்போர்கள், மற்றவர்கள் சொல்லும் எதனின் உள்ளேயும் உள்ள உண்மையை அறிய வல்லவர்களாவார்கள்.

உனுபவர் - உன்னுபவர் - சிந்திப்பவர்கள் ; மனும் - மன்னும் - நிலைத்த ; வல்லவர் - வல்லவர்கள்.

## கோம்பி விருத்தம்

மூலமும் உரையும்

முற்றுப் பெற்றன.

# செய்யுள் முதற்குறிப் பகராதி.

[எண் செய்யுளெண்]

# அநுபந்தம் I.

---

## கோம்பி விருத்தத்தின் இங்கிலிஷ் மூலம்

### THE CHAMELEON

Two travellers in friendly chat
Now talked of this, and then of that;
Discoursed awhile, amongst other matter,
Of the Chameleon's form and nature.
'A stranger animal', cries one,
'Sure never lived beneath the sun;
A lizard's body, lean and long,
A fish's head, a serpent's tongue;
Its foot with triple claw disjoined;
And what a length of tail behind!
How slow its pace! and then its hue?
Who ever saw so fine a blue?'

'Hold there,' the other quick replies,
"'Tis green; I saw it with these eyes,
As late with open mouth it lay,
And warmed it in the sunny ray;
Stretched at its ease the beast I viewed
And saw it eat the air for food.'

'I've seen it, Sir, as well as you,
And must again affirm 'tis blue:
At leisure, I the beast surveyed
Extended in the cooling shade.'

"'Tis green, 'tis green, Sir, I assure ye';
'Green!' cries the other in a fury—
'Why, Sir, d'ye think I've lost my eyes?'
"'Twere no great loss,' the friend replies,
'For if they always serve you thus,
You'll find them of but little use.'

So high at last the contest rose,
From words they almost came to blows;
When luckily came by a third—
To him the question they referred,
And begg'd he'd tell them, if he knew,
Whether the thing was green or blue.

'Sirs,' cries the umpire, 'ceased your pother,
The creature's neither one nor t'other;
I caught the animal last night,
And viewed it o'er by candle-light.
I marked it well,—it's black as jet;
You stare,—but, Sirs, I've got it yet,
And can produce it.' 'Pray, Sir, do,
I'll lay my life the thing is blue.'

'And I'll be sworn, that, when you've seen
The reptile, you'll pronounce him green.'

'Well then, at once to solve the doubt,'
Replies the man, 'I'll turn him out;
And when before your eyes I've set him,
If you don't find him black, I'll eat him—'

He said: then full before their sight,
Produced the beast, and lo! 'twas white!
Both start; the man looks wondrous wise.—

'My children,' the Chameleon cries,
(Then first the creature found a tongue,)
'You all are right; and all are wrong;
When next you talk of what you view,
Think others see as well as you;
Nor wonder, if you find that none
Prefers your eye-sight to his own.'

J. MERRICK.

# அநுபந்தம் II.

## கோம்பி விருத்தத்தைப் பற்றிய அபிப்பிராயங்கள்.

THE HON'BLE MR. JUSTICE SUBRAMANIA AIYAR, C.I.E.:—

I am extremely obliged to you for the copies of the Tamil publications* you have sent me. I need hardly say your labour for the improvement of the chief vernacular of this Presidency is very laudable. I hope they will be duly appreciated by the public.

RAI BAHADUR C.W. TAMOTHARAM PILLAI AVERGAL, B.A.,B.L

Your Kombi-Viruttam was really a mental feast to me. It is likely to exile the Nari and the Eli Viruttams to find shelter in the ambushes of the forests and the holes in the walls, sitting majestically in the divine throne of lofty green trees adorned with diamonds of flowers and emeralds of fruits under the expansive canopy of heaven embedded with brilliants of stars. The style also is very charming. Your notes adapt the book to be read by all, the learned and the students, with equal interest. I hope you will be well patronised by the Tamil Public.

---

MR. E. S. M. SENATHI RAJA, LL., B., Barrister-at-Law Member of the Royal Asiatic Society, and Membre De la Societe Asiatique de Paris :—

I need hardly add that the perusal of your poem has given me much pleasure, and that it deserves to be more generally known. Though the ground work of the poem is apparently taken from the story of the "Chameleon", the treatment of the subject is quite original. The ideas are in harmony with those of modern thought, while the

---

*A Tamil translation of Veterinary Major Mills' "Indian Stock Owners' manual.", a Tamil translation of Paradise Lost, Book I, in Viruttam metre, Nellaichchiledaivenba (an original poem in Tamil) and Kombi Viruttam (another original poem in Tamil).

style is classical, and the metre is in strict conformity with the canons of Tamil prosody. The metaphors are generally very happy and they are sometimes employed most effectively to "point a moral." I must cangratulate you on adding to modern Tamil literature a work not unworthy of classical times.

---

MR.K.C.B. KUMARAKULA SINGH MUDALIAR, TAMIL Interpreter to H. E. the Governer of Ceylon :—

It compares favourably, in sweetness and sentiments, with similar works of recognised merit in our extensive Tamil literature, while it bears many marks of originality. The purity of diction has struck me specially as worthy of commendation. I note with pleasure that you have not followed the tendency of the times to introduce foreign elements into our literature, even when there is no necessity for so doing, and thus to cultivate a style which, at the present rate of corruption, is likely before long so seriously to affect the historic individuality of our language as to render the existing literature almost unintelligible and useless, and that wherever Sanskrit words occur in the text they are presented in a Tamil guise. It is this, more than anything else, from a strictly literary point of view that adds to the grace and charm of "Kombi Viruttam." I consider your work a valuable contribution to our literature.

---

MR. S. PULNEY ANDY, M. D. :—

You have expressed your ideas in the best classical diction possible. The poetical execution of the plot is very creditable, and if all English educated natives would follow your example, I am certain our Vernaculars will not be allowed to die out. All the western light which penetrate into the present system of education in this land, could be well utilized in our vernacular much to the advantage of the people and more rapidly than the tardy process of acquiring that knowledge through the medium of a foreign language.

---

MR. T. RAMAKRISHNA PILLAI AVERGAL, B.A., Fellow of the Madras Vniversity :—

1 have read the book and it is both interesting and amusing.

---

MR. V. G. SURIYANARAYANA SASTRIGAL, B.A., Senior Tamil Pandit, Madras Christian College :—

It is with very great pleasure I acknowledge the receipt of your sweet little poem "Kombi Viruttam," and with a feeling of sprouting joy alone, I pen these few lines to you. Not only have I read the poem myself, but I have read it to many of my friends also, who had the fortune to hear it.

The central topic of the poem is grand and excellent, the language is classical, and the metre very well befits the rhythm and the general harmony of the work. The ease and the flow of the stanzas argue your keen insight into the art of versification. The poem abounds with beautiful descriptions, lofty sentiments and rich imagery.

In congratulating you on your success in this attempt, I sincerely wish that the Text-book Committee of the Madras University may do proper justice to it by prescribing it as a Text-book for any of the University Examinations.

---

## PRESS NOTICES.

The relativity of knowledge is one of the questions that have a peculiar interest for the Hindu thinker. Even the tales of the people, the *Katha Manjari*, for example, deal with it, and Mr. Subramania Mudaliar may be congratulated on having secured a popular theme for his poem. The plan of the poem is simple. A dry sandy plain is described, and the reader's attention is fixed on two men crossing it, who see before them a beautiful oasis. They enter this and charmed with a beautiful shade, the cool breeze, and the calm aspect of a lotus-covered tank, they try to describe what they see. Finally, one says that the colour of the water in the tank is blue, like the chameleon,

*Kombi.* The other remarks that the chameleon is green, and this leads to a wordy quarrel, which is stopped by a third traveller who says that he caught a chameleon the night before, and is sure it is black. He produces it, and to the confusion of all, it is *white.* More similes are invented to express its form and colour, and its changes of colour ............ The story is told of how the chameleon fascinates the peacock, so that the peacock will give its eyes to it, and the poem ends with references to the knights who quarrelled about the metal of which a shield was made, to the Tamil tale of the twenty-four travellers who crossed a stream and found that they were but twenty-three, and to one or two other Tamil anecdotes. The moral of it all is, that "one object has many aspects and is affected by circumstances of time and place ; but men who know not this, affirm that what they themselves see is real."

The poem itself is in the Viruttam metre, and is very felicitous. The prose rendering is very readable.—*Christian College Magazine, May 1898.*

It is therefore with unfeigned pleasure we learnt that our friend had struck out a new line of composition altogether and we welcome "*Kombi Viruttam*" as the earnest of what we are to have from his facile pen in future of short and instructive stories, told in elegant and simple language. This piece deals with the story of that interesting animal of the lizard kind, the chameleon that changeth its hues. In the description of the arid desert and the oasis in its midst, he collects together some beautiful figures. The moral of this tale is quite familiar to Tamil readers and they use various other similes to express the same truth, namely, not to reject everything as false but to recognize whatever truth there may be in each, and our author collects a number of them and expresses them in various ways in the last 20 verses. The notes appended are very useful and we think they might be briefer too. We once more say we have read the book with very great pleasure and we dare say the book will find its way into every Tamil home.—*The Light of Truth, April 1898.*

We have perused with immense delight the Tamil

peom by Mr. V. P. Subramania Mudaliar. The subject-matter of the poem, as the author says in his preface, is based on the English story of "Chameleon." But it is not a mere rendering from the English but has been so altered and worked upon to suit the genius and tradition of the Tamil language that one who does not look at the preface and notes will at first sight take it for an original poem. The style of the poem is smooth and flowing and the ideas expressed are commendable. The poem in every way does credit to and even adds to the reputation which Mr. V. P. Subramania Mudaliar has already won in the literary field with his excellent metrical Translation of Paradise Lost, Book I.

To enable the readers to comprehend the English ideas and difficult passages embodied in the poem, notes are given under each stanza explaining the allusion to English stories and Tamil classic legends and the meaning of hard words.

We hope that the public will give the author the encouragement he so richly deserves so that he may persevere in his labours in this direction.—*The Christian Patriot 12th March, 1898.*

Kombi Viruttam, a poem in seventy-two stanzas by Mr. V. P. Subramania Mudaliar, whose faithful metrical rendering of Milton's *Paradise Lost*, Book 1, has been well appreciated by good Tamil Scholars, is decidedly better than the latter in its metre, diction, and imagery. This is due, we think, to the poet's imagination being unfettered by any English original. Though Merrick's *Chameleon* suggested the subject to the poet and though some Western ideas have been introduced into the Tamil poem, Kombi Viruttam is entirely original and reflects Mr. Mudaliar's study of the great Tamil classics with a poet's eye. It is a book of beautiful similes, most of which are very apt and clearly illustrative and drawn directly from nature, both animate and inanimate. This interesting poem inculcating *audi alteram partem* is a substantial addition to the Tamil poetic literature and must commend itself to the lovers of Tamil, old and young.—*Gnanabodini, April 1898.*

## கோம்பி விருத்தத்தைப் பற்றிய அபிப்பிராயங்கள்

### பிரமஸ்ரீ தாக்ஷிணாத்திய கலாநிதி
### மஹா மஹோபாத்யாய சாமிநாதையரவர்கள் எழுதியது.

ம-ா-ா-ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்க ளியற்றிய கோம்பி விருத்தத்தைப் படித்து நிரம்பச் சந்தோஷ மடைந்தேன். இதில் அமைந்துள்ள சொல் நயமும் பொருள் நயமும் மிகப் பாராட்டற்பாலன. இதைப் படிக்கும்பொழுது இடையிலே வைத்துவிட்டு வேறொன்றைச் செய்தற்கு எனக்கு மனம்வரவில்லை. இவர்கள் சிறந்த நூல்களில் ஒழுங்கான பாண்டித்திய முள்ளவர்களென்பதை இது வெளியாக்குகின்றது. இந்நூல், வித்தியாசாலையில் படிக்கும் மாணாக்கர்களுக்கு மிகப் பயன்றருமென்று நம்புகிறேன்.
இங்ஙனம்,

கும்பகோணம் காலேஜ்,
21-12-97.
**வே. சாமிநாதையன்.**

---

ராய்பஹதூர்
### சி. வை தாமோதரம் பிள்ளையவர்கள் இயற்றியது.

கோம்பி விருத்தம், குமைந்து நரியெலிகள்
தேம்பி யிரும்புஞ் சிறைவளையும்—போம்படி,வந்
தாணு முகில்விதா னத்தா லரியணைவீற்
றீணுய மின்றிருந்த தே.

ஷை யாரவர்கள் இங்கிலீஷில் எழுதியுள்ள அபிப்பிராய சாரம்:—கோம்பிவிருத்தம் மெய்யாகவே என் மனத்துக்கு விருந்தாகியது. அது நரிவிருத்தத்தையும் எலி விருத்தத்தையும் காடுகளிலும் வளைகளிலும் மறைவிடந்தேடி யோடச்செய்து, பூவாகிய வயிரங்களாலும் காயாகிய மரகதங்களாலும் அலங்கரிக்கப்பெற்ற உயர்ந்த பைந்தருச் சிங்காதனத்தின்மேல் உடுமணிகளிழைத்த அகல் விசும்பு விதானத்தின் கீழ்க் கெம்பீரமாக அரசு வீற்றிருக்கும்போலும். கோம்பி விருத்தத்தின் நடை மிகவும் மனோகரமானது. அதன் உரை அதனை வாசிக்கும் பண்டிதரும் வித்தியார்த்திகளும் ஒரு நிகராக இன்பம் அநுபவிக்கும்படி உதவுகின்றது. இந்நூலாசிரியருக்கு (இதுபோன்ற நூல்கள் இயற்றுதலில்) ஊக்க முண்டாகும்படி தமிழறிந்த சகலரும் உதவி புரிவாரென நம்புகிறேன்.

திருவாவடுதுறை ஆதீன வித்வான் ம-௱-௱-ஸ்ரீ சேற்றூர்ச சுப்பிரமணிய கவிராயரவர்கள்:—

கோம்பி விருத்தமானது காஞ்சிப்புராண முதலாய நூல்களைப் போலச் சொன்னயமும் பொருணயமு மணிநயமும் விளக்கி நவின்றோர்க்கினிமை முதலாய அழகுடையதாய், அதிசயத்தைத் தருகின்றது.

ஸ்ரீ கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகளும் யாவர்க்கு மிக வியப்பைத் தரத் தக்கதென்று திருவாய் மலர்ந்தருளப் பெற்றது.

---

உடுமலைப்பேட்டை ஐஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் ம-௱-௱-ஸ்ரீ எம். ஆர். கந்தசாமிக் கவிராயரவர்கள்:—

தாங்கள் கருணையுட னனுப்பிய "கோம்பி விருத்தம்" என்னும் புஸ்தகத்தைப் பார்த்து மிகுந்த மகிழ்ச்சி யுற்றேன். இந்நூலில் பாலைநிலம் சோலை தடாகம் தென்றல் இவற்றின் வருணனைகள் இதுவரை கேட்கப்படாத புதிய கற்பனைகளாக அமைக்கப்பட்டிருத்தலை நோக்கி யானும் எனது நேயர்கள் பலரும் அளவற்ற மகிழ்ச்சி யுற்றோம்.

"மருத்தப்பா துறைகுழலார் மதனனையாய் நினதுதிரு வாக்காங் கோம்பி, விருத்தப்பாப் புத்தகமென் னிடத்துவந்து பேரின்பம் விளைத்த தென்றன், கருத்தப்பா வதின்முழுகிக் கிடத்தலினு லதன்பெருமை கழற வல்லேன், பொருத்தப்பாக் கியம்பலவு மெய்துநினைப் போல்பவர்யார் புவியின் மாதோ."

"செந்தமிழ்"

கோம்பி விருத்தம் என்பது ஓந்தியைப் பற்றிய ஓரழகிய கதையினைத் துணைக்கொண்டு அதனியல்பை நன்கு விளக்குகின்றது. இதுபோன்ற நூல் வெகு நாளாகத் தமிழர்க்குப் புதுமையாயினும், முற்காலத்தில் ஜைனர்கள், எலிவிருத்தம், கிளிவிருத்தம், நரிவிருத்தமெனப் பெயரிய நூல்கள் இயற்றியிருந்தனரென்று அறியப்படுகின்றது. இக்கோம்பி விருத்தம் 72 பாடல்களானமைந்த சிறுநூலே யாயினும் படிக்கப்படிக்க மகிழ்வூட்டுவதிற் பெருமை வாய்ந்துளது.

"The Morning Star" (உதய தாரகை), 3rd March 1898. இந்நூல் ஆங்கில பாஷையிற் செய்யுணடையாயுள்ள வோர் கதாசாரத்தை ஆதாரமாய்க்கொண்டு பற்பல வருணனைகள் ஒப்பனைகள் புனைந்து தமிழ் விருத்தப்பாவில் மொழி பெயர்க்கப்பட்

டது. கோம்பி என்பது பச்சோந்தி. கடும் வறப்புத்தோன்றும் பங்குனி மாதத்து வெப்பம் மிகுந்த ஓர் தினத்திலே நீர் நடுவதாகிய வடவாமுகாக்கினிபோற் பூப்பரப்பினிடையே எரிந்துகொண்டிருந்த ஓர் பெரிய ஆரணியத்தின் கண்ணே யாத்திரை செய்த திரியாத்திரிகர் ஆங்கு நெருப்பின் மத்தியிலிருந்த நீரென விளங்கிய ஓர் தண்சோலையினெடுநேரம் உட்கார்ந்து வேறு வேறு சமயத்தில் தங் கண்ணுக்கு விடயமான ஓர் கோம்பியின் வர்ணத்தை ஒருவர்க்கொருவர் மறுதலைப்படச் சொல்லி ஈற்றிற் பல சமயத்தாற் பலநிறங் காட்டுந் தன்மைத்தே யாதலின் மலங்கு மீனின் தலையைக் கண்டார் மீனென்றும், வாலைக்கண்டார் பாம்பென்றும் உண்மை பிறழ மொழிந்ததுபோலானோ மென்றுகண்டு, காரியஞ் சமரசமாம் வகை தெளிந்தனரெனக் கூறுவதாம். கோம்பியின் பல நிறங்கள் இந்நூலில் எடுத்துப் பேசப்படுதலின் கோம்பி விருத்தம் எனக் காரண அபிதானம் பெற்றது.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு" எனும் பொருட்கிடனைச் சொல்வளம் பொருள்வளம் பெருக மதுர உரையோடு இந்நூலை இயற்றிய ஆக்கியோன் சுவர்க்க நீக்கக் கவிதை ஆதிய சில கிரந்தங்களுக்குக் கர்த்தாவாகிய சென்னபட்டணம் வெ. ப. சுப்பிரமணிய முதலியார். தமிழிலுள்ள விசேட காவியங்களுக்கு இணையான வனப்புகள் நிறைந்த இந்நூலை யாவருஞ் சன்மானித்துப் பெரும்பயனடைக.

### "இந்து சாதனம்" 2-3-98

சென்னை ம-ா-ா-ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்களா லியற்றப்பட்டுள்ள இம்கோம்பி விருத்தச் செய்யுளை நாம் வாசித்து மிகவும் சந்தோஷமானோம். இதில் ஆங்கில பாஷையிலுள்ள ஓர் திக்கதை செந்தமிழ்ச் செய்யுள் நடையில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றது. இவ்வாக்கியோன் சுவர்க்க நீக்கம் (Paradise Lost) என்னும் ஆங்கில மகா காவியத்தைத் தமிழ்ச் செய்யுள் நடையில் மொழிபெயர்த்துக் கீர்த்தி பெற்றவர்.

### "விவேக சிந்தாமணி." ஜூன் ௴ 1898

ஆங்கில பாஷையில் தேர்ச்சி பெற்ற அவர் தமிழை மிக்க அவாவுடன் கற்று அப்பாடையில் நூல் செய்யப் புகுதல் இந்நூலின்கண் வருணிக்கப்பட்டிருக்கும் பாலைவனத்தின் நடுவே அழகுற அமைந்திருக்கின்ற பூங்காவை யொக்கும்......

........................ஒவ்வொரு பாட்டிற்கு மடியில் எழுதப்பட்டுள்ள பொழிப்புரையானது வேண்டிய இடங்களில் விரிவாகவும் ஏனைய இடங்களில் சுருக்கமாகவும் தெள்ளிய நடையில் அழகுறவமைந்திருக்கின்றது. இந்நூலின் சிற்சில விடங்களிற் கூறும் விஷயங்களைப் பார்க்குங்கால், நூலாசிரியருக்கு அவ்வவ் விஷயங்களில் ஏற்பட்டுள்ள பாண்டித்தியமானது படிப்போர்க்கு நன்கு புலப்படும். மேலும் ஆங்காங்கே எடுத்துக்காட்டும் மேற்கோள்களும் நம்மவர்க்குத் தமிழ்ப்பாஷையிலுள்ள சிறந்த நூல்களின் பழக்கமுண்டென்பதை நன்கு வெளிப்படுத்துகின்றன. அவரது உவமங்களும் மிகப்பொருத்தமாக விருக்கின்றன.

"ஆரிய ஜனப்பிரியன்" 8-5-98.

ம-ா-ா-ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் இயற்றிய "கோம்பி விருத்தம்" நமது பார்வைக்கு அனுப்பப்பட்டது. அது சொற்பொலிவாலும் பொருட்போக்காலும் பழைய நூலொன்றென்றே சொல்லக் கிடக்கின்றது. அதிற் சொல்லிய வருணனை முழுவதும் சிறந்தனவாயும் பிறர் சொல்லாதனவாயு மிருக்கின்றன. செய்யுள் யாவும் விழுமிய ஓசையுடையவாய் செவிக்கின்பம் பயப்பனவா யிருக்கின்றன. கோம்பி விருத்தம் எவ்வாற்றானும் நூலாசிரியர்க்குச் சிந்தாமணியாதிய பெருங் காப்பியங்களிலுள்ள விசேஷப் பயிற்சியை நன்கு புலப்படுத்துகிறது. ஈதிங்ஙனமாக; அதனோடு சேர்த்துள்ள உரை மாணுக்கராதியர்க்கு மிகவும் பயன்படத் தக்கதாய்ப் பழைய உரைகாரர்களது போக்கை யுடையதாயிருக்கிறது. அதனுள் அடங்கி யிருக்கும் அநேக அரிய பெரிய விஷயங்கள் நூலாசிரியர்க்கு ஆங்கில திராவிட பாஷைகளிலுள்ள நூலாராய்ச்சியைத் தெரிவிக்கின்றன. தமிழ்ப் பாஷையின் அபிமானமுள்ளார் யாவர் கையினுங் கோம்பி விருத்தம் இருத்த லவசியமென்று நினைக்கிறோம்.

---

## நெல்லைச்சிலேடைவெண்பாவைப் பற்றிய அபிப்பிராயங்கள்

"செந்தமிழ்"

நெல்லைச்சிலேடை வெண்பா என்பது வெண்பாவில் திருநெல்வேலி விஷயமாக வியற்றப்பட்ட ஒரு சிறு பிரபந்தம். ஒவ்வொரு வெண்பாவின் முற்பாதியில் தாங்குறித்த தலத்தையும், பிற்பாதியில் அத்தலத்திற் றிருக்கோயில் கொண்ட பெருமானையும் குறித்துப் பெரும்பான்மையும் சொல்லணி பெறப்

புனைந்தது. இத்தகைய சிறு பிரபந்தங்கள் பாடுபவரது கவித்திறமையை நன்ருகக் காட்டவல்லன. ஆங்கில விற்பன்னராகிய முதலியாரவர்களியற்றிய இந்நூல் மிகச் செவ்விதினமைந்து விளங்குதலைக் கண்டு வியக்கின்ரேம். இவைகளை யெல்லாம் விரிப்பதிலும் சுருங்கச் சொல்லுமிடத்து, முதலியாரவர்களைச் "சிறந்த தமிழ்க்கவி" என்றே முடிக்கலாம்.

"விவேகபாநு"

நெல்லைச்சிலேடை வெண்பா—இது திருநெல்வேலி யென்னும் ஸ்தலத்தை முன் பாதியில் சிலேடை வகையால் சிறப்பித்தும், அத்தலத்தில் எழுந்தருளிய சிவபிரானைப் பிற்பாதியில் திரிபுவகையால் சிறப்பித்துங் கூறப்பெற்ற 100 வெண்பாக்களையுடையது. சிலேடையும் திரிபும் செம்பாகமாகவே அமைக்கப்பெற்றிருத்தலால் சிறிது ஊன்றி நோக்கிற் பொருள் காண்டல் எளிதே. பொருள் புலப்பட்டவுடன் மனத்து எழும் பெருமகிழ்ச்சிக்கு வரம்பு காணலரிதாம். நெல்லை என்னும் சொல்லை ஆசாக வைத்து 100 சிலேடை கூறுதல் மிகக்கொண்டாடற்பாற்று. செய்யுளியற்றும் வன்மையுடையார் இதன்றிறங்கண்டு பிரமிப்பது திண்ணம். இதற்கு உரையும் இருக்கின்றது.

---

## அநுபந்தம் III.

### வே. ப. சுப்பிரமணிய முதலியார் இயற்றிய நூல்கள்

**1. சுவர்க்க நீக்கம் முதற்காண்டம்**

"பாரடைஸ் லாஸ்டு" என்னும் இங்கிலிஷ் காவியத்தினின்று விருத்தப்பாவில் மொழி பெயர்த்து, மில்ட்டனுர் சரித்திரம், சுவர்க்க நீக்கக் கதை, சுவர்க்க நீக்கமுதற்காண்ட வசனம், சுவர்க்க நீக்கப்பொது வியாக்கியானங்கள், ஷை முதற்காண்டச்சிறப்பு வியாக்கியானங்கள், அரும்பத விளக்கம் இவைகளுடன் பதிப்பித்தது.

ராய்பஹதூர் சி. வை. தாமோதரம் பிள்ளை யவர்களால் சிறப்புப்பாயிரம் அளிக்கப்பெற்றது.

பாடபுஸ்தக கமிட்டியாரால் (Text-Book Commitee) தெரிந்தெடுத்துச் சிபாரிசு செய்யப்பட்டு வித்தியா இலாகாத் தலைவரால் (Director of Public Instruction) ஹைஸ்கூல்களில் ஐந்தாவது ஆருவது வகுப்புகளில் உபயோகிக்கத் தக்கதென்று அங்கீகரிக்கப் பெற்றது.

(200-க்கு அதிகமான பக்கங்கள் உள்ளது)
திண்மையான அட்டையுடன் ரூ. 0-12-0.
காலிகோ கட்டடம் சுவர்ண எழுத்துக்களுடன் ரூ 1-4-0

## சில பண்டித சிரேஷ்டர்களின் அபிப்பிராயம்

**பிரமஸ்ரீ மஹாமஹோபாத்யாய சாமிநாதையாவர்கள்:—** இதில் உள்ள செய்யுள் நடையும் வசன நடையும் நிரம்ப நன்றாக இருக்கின்றன. இந்நூல் வேறொரு பாஷையிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டிருந்தும், படிக்குங் காலத்தில் அவ்வாறு தோன்றாமல் நடை விசேடத்தால் நூதனமாகச் செய்யப்பட்ட மூலநூல்போல விளங்கிப் பொருளை வருத்தமின்றி நன்கு புலப் படுத்துகின்றது.

"கல்வியே கற்புடைப் பெண்டிரப் பெண்டிர்க்குச், செல் வப் புதல்வனே யீர்ங்கவி" என்று ஆன்றோர் கூறியவண்ணம், இந்நூல் முதலியாரவர்களுடைய இலக்கிய இலக்கணப் பயிற் சிக்குத் தக்கவாறு அமைந்ததென்று சொல்லலாம்.

**டாக்டர். ஜி. யூ. போப்பையரவர்கள்:—**(இங்கிலிஷி லிருந்து மொழி பெயர்த்தது) இந்நூலின் முதற்பகுதி முற்றுப் பெற்றிருக்குந் தன்மையைப்பற்றி மனப்பூர்வமான துதிமொழி யன்றி வேறொன்றும் கூறவிடமில்லை. இம் மொழிபெயர்ப்பை அதிநுட்பமாகக் கவனஞ் செலுத்தி ஆராய்ச்சி செய்த யாம், மொழி பெயர்த்தவர் மூலப்பெருங்கிரந்தத்துக் கிணங்க முட்டுப் பாடின்றி யொழுகும் இனிய தமிழ்க் கவிகளமைத்ததில் மிக அதிகமான — மெய்யாகவே ஆச்சரியகரமான — சித்தியடைந் திருக்கிறாரென்று கூறக்கடவேம்.

[பின்னும் ஷை யார் தமது திருவாசக ஆங்கில மொழி பெயர்ப்புப் பெருங்கிரந்தத்தின் முகவுரையில் இந்நூலை நன்கு மதித்து கூறியிருக்கின்றனர்.]

**வாக்கையாவர்கள், M. A., C. M. S.—**இதன் (சுவர்க்க நீக்கத்தின்) சிறப்பைப்பற்றி நான் பலராலும் அறிந்திருக்கி றேன்.........வசன பாகங்களின் நடையழகுக்கே இப்புஸ்தகம் யாவரும் வாங்கி வாசிக்கத்தக்கது......இம் மொழிபெயர்ப்பு, உண்மைக் கவிக்குரிய லக்ஷணங்களை உடையதாயிருப்பதனோடு மூலநூற்கருத்தை உள்ளபடியே வெளியிடுகிறதனால் ஆதரிக்கத் தக்கதென்று முழுமனத்துடன் கூறுகின்றேன்.

## II. கோம்பி விருத்தம்

**ம-ா-ா-ஸ்ரீ ராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்**

கள்:—(இங்கிலிஷிலிருந்து மொழிபெயர்த்தது) கோம்பி விருத்தம் என் மனத்துக்கு விருந்தாகியது......கோம்பி விருத்தத்தின் நடை மிகவும் மனோகரமானது. அதன் உரை அதனை வாசிக்கும் பண்டிதரும் வித்தியார்த்திகளும் ஒருநிகராக இன்பம் அனுபவிக்கும்படி உதவுகின்றது.

### III. நெல்லைச்சிலேடை வெண்பா

பிரமஸ்ரீ மஹாமஹோபாத்யாய சாமிநாதையரவர்கள்
சிறப்புப்பாயிரம் பெற்றது

விவேகபாநு:—திரிபும் சிலேடையும் செம்பாகமாகவே அமைக்கப்பெற்றிருத்தலால் சிறிது ஊன்றி நோக்கில் பொருள் காண்டல் எளிதே. பொருள் புலப்பட்டவுடன் மனத்து எழும் பெருமகிழ்ச்சிக்கு வரம்பு காண்டலரிதாம். நெல்லை என்னும் சொல்லை ஆசாக வைத்து நூறு சிலேடை கூறுதல் மிகக் கொண்டாடப்பாற்று. செய்யுளியற்றும் வன்மையுடையார் இதன்றிறங்கண்டு பிரமிப்பது திண்ணம். இதற்கு உரையும் இருக்கின்றது.

### IV. இந்து தேசத்து கால்நடைக்காரர் புஸ்தகம்

(இங்கிலிஷிலிருந்து மொழி பெயர்த்தது.) விலை ரூ. 2-0-0 (புஸ்தகம் கையிருப்பில்லை.)

### V. இந்தியாவில் கால்நடைகளுக்குக் காணுகிற அதிக பிராணபாயமான வியாதிகளைப் பற்றிய புஸ்தகம்.

(இங்கிலிஷிலிருந்து மொழி பெயர்த்தது.) கவர்ன்மென்ருரால் பிரசுரிக்கப்பட்டது. சென்னைக் கவர்ன்மென்டு அச்சுக்கூடம் சுப்பிரிண்டெண்டெண்டுக் கெழுதி வாங்கிக்கொள்ளலாம்.

விலை அணு 3

### VI. கல்வி விளக்கம் முதற்பாகம்.

ஷை வெ. ப. சுப்பிரமணிய முதலியார், ஸ்ரீ S. V. கள்ளபிரான் பிள்ளையவர்கள் B. A., ஸ்ரீ அப்பாவுப் பிள்ளையவர்கள் L. M. &. S. என்பவர்கள் சேர்ந்து இங்கிலிஷிலிருந்து மொழி பெயர்த்தது.

விலை ரூ. 1—0—0.

### VII. அகலிகை வெண்பா — விலை ரூ. 1—0—0.

☞ மேற்குறித்த புஸ்தகங்களில் IV. V. இலக்கமிட்ட புஸ்தகங்கள் தவிர மற்றெல்லாப் புஸ்தகங்களையும் திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரிடம் பெறலாம்.

